உ

ஓம் குமரகுருதாச குருப்யோ நம :

திருச்சிற்றம்பலம்



## பாம்பன் ஸ்ரீமத் குமரகுருதாச சுவாமிகள்

அருளிய பாடல்களின்

# பாராயணத் திரட்டு

ஓம் குமரகுருதாச குருப்யோ நம:

## குரு வணக்கம்

**வேதக் கலையும் சித்தாந்த மேன்மைக் கலையும் நன்குணர்ந்து**
**பேதக் கலைகள் தகர்த் தெறிந்த பேரானந்தப் பெருவாழ்வே**
**நாதத் தமிழில் குகமேன்மை நாட்டி நிறுத்தும் சிவகுருவே**
**பாதத் துணைகள் எமக்கருள்வாய் பாம்பன் குமரகுரு மணியே.**

– டாக்டர் S.P. சபாரத்தினம்

**உரை :**

இறை நூல்கள் எனவும் முதல் நூல்கள் எனவும் போற்றப்படும் வேதங்கள், ஆகமங்கள் ஆகியவை கூறும் மெய்ப்பொருள் நுட்பங்களையும் அவை உறுதிபடுத்திக் கூறும் சித்தாந்தம் எனப்படும் மேன்மை பொருந்திய தத்துவ நெறியையும் தெளிவாக உணர்ந்து கொண்டு,

இறைவனோடு ஆன்மா இரண்டறக் கலந்து விளங்குவதற்குத் தடையாக விளங்கும் பேத உணர்வுகளையும், பேத நடைமுறைகளையும் அடியோடு தகர்த்து விலக்கி, பூரண ஞானத்துடன் விளங்கும் பெருமானே! பேரானந்தப் பெருவெளிமயமாக விளங்கும் அருள் பேரொளி வாழ்வே!

தெய்வ நிலையைக் கொடுக்கும் சூக்கும நாதங்கள் நிறைந்துள்ள தமிழ் மொழியில் முருகப் பெருமானின் முதன்மை சிறப்பு மூலம் நிலை நாட்டிக் கூறியுள்ள சிவமயமான குருப்பெருமானே!

பாம்பன் எனும் திருத்தலத்தில் வாழ்ந்து குருமார்களுள்ளே இரத்தினம் போன்று ஒளிர்ந்து விளங்கும் பெருமானே!

நான் ஈடேறும் பொருட்டு நினது திருவடிகளிரண்டையும் என் தலைமீது பதித்து அருள் புரிவீராக.

உ

ஓம் குமரகுருதாச குருப்யோ நம :

ஓம் குஹப்ரஹ்மணே நம :

# பாம்பன் ஸ்ரீமத் குமரகுருதாச சுவாமிகள் அருளிய பாடல்களின்

# பாராயணத் திரட்டு

வெளியீடு :

மஹாதேஜோ மண்டலம்

N. ஜெயராமன்

குமரகுரு இல்லம்

130, புஷ்பாவதி அம்மாள் தெரு.

மேற்கு மாம்பலம், சென்னை-600 033.

போன் : 044 24893298

ஓம் குமரகுருதாச குருப்யோ நம :

ஓம் குஹப்ரஹ்மணே நம :

# பதிப்புரை

நமது குருநாதர் அத்தியாச்சிரம சுத்தாத்துவித வைத்திக சைவ சித்தாந்த ஞானபானு பாம்பன் ஸ்ரீமத் குமரகுருதாச சுவாமிகள் ஸ்ரீ குமார பரமேஸ்வரன் திருவருளினால், அவரது திருநோக்கால் - வேத, வேதாந்த, ஆகம, ஆகமாந்த, சித்தாந்த சாத்திரங்களையும், ஏனைய சைவ நூல்களையும், ஆன்றோர் நூல்களையும், பிற மதத்து நூல்களையும் பூரணமாக உணர்ந்தவர், எனது கண்ணும் கருத்தும் நுழையாத நூல்களே கிடையாது என்று ஸ்ரீமத் சுவாமிகள் அறுதியிட்டுக் கூறியுள்ளார்கள்.

பரம்பொருள் இலக்கணத்தைப் பூரணமாக ஆராய்ந்து, ஒரு தாயின் வயிற்றில் பிறந்தவர் எவரும் பரம்பொருள் ஆக மாட்டார் என்றும், பரம்பொருள் என்பது சிவபெருமானை மட்டுமே குறிக்கும் என்றும் தாபித்தவர்.

இறைவன், பார்வதிநாதனாக, ஐம்முகச் சிவனாகக் காட்சி அளிக்கும் போது, அம்மூர்த்தம் "பரமேஸ்வரன்" என்று ஆகும். அதற்கான மந்திரம் "ஓம் நமசிவாய" அல்லது "ஓம் சிவாய நம" எனும் பஞ்சாட்சரம் ஆகும்.

இறைவன், பார்வதிநந்தனனாக, குடிலைமுகம் வெளிப்படக் காட்டி அறுமுகச் சிவனாகக் காட்சி அளிக்கும் போது அம்மூர்த்தம் "குமார பரமேஸ்வரன்" என்று ஆகும். அதற்கான மந்திர மனு "ஓம் சரவண பவாய நம:" எனும் சடக்கர தசாக்கரமாகும்.

இவ்விரண்டு வழிபாடும் சிறந்த சைவ நெறியேயாகும். பயன்பெறுவதில் எவ்வித மாறுபாடும் இல்லை.

"கௌமாரம்" எனும் மதம் ஸ்ரீ முருகப் பெருமானை உயர்த்தியும், ஸ்ரீ சிவபெருமானைத் தாழ்த்தியும் கூறுவதால், அது கொள்ளத்தக்கதல்ல.

இதயார்ச்சனைக்கு "ஏக" தெய்வ ஏகமூர்த்த வழிபாடே கொள்ளல் வேண்டும். இரண்டு மூர்த்தங்களையும் கொண்டால், அது சலனமாகித் தவறாக முடியும்.

"ஸ்ரீ குமார பரமேஸ்வரனை வழிபடு மூர்த்தமாகக் கொள்வோமானால், ஒல்லையில் இவ்வொரு பிறவியில் தானே ஈறிலாக்கதி யெய்தலாம்" என நமது குருநாதர் சாதித்துள்ளார். அவர் அடியவராகிய நாம், அவர் வழியையே பின்பற்றுவோமாக.

நமது குருநாதர், நாம் உய்யும் பொருட்டுப் பல தோத்திர சாத்திரங்களை அருளிச் செய்துள்ளார்கள். அற்றுள் சில பதிகங்களை, நித்திய பாராயணத்துக்காக, இச்சிறு நூல்வடிவில் அளித்துள்ளேன்.

இந்த ஞான பொக்கிஷத்தை வெளியிடும் பாக்கியத்தை எனக்களித்த ஸ்ரீவல்லி தேவ சேனாம்பா சமேத ஸ்ரீ குமார பரமேஸ்வர பெருமானுக்கும், நமது குருநாதருக்கும் எனது சிரம்தாழ்த்தி நன்றியும், வணக்கமும் கூறிக்கொண்டே இருக்கிறேன்.

இந்த பாராயணத்திரட்டு நல்ல முறையில் வெளிவர எனக்கு உறுதுணையாக இருந்த அனைத்து அன்பர்களுக்கும் ஸ்ரீகுமாரபரமேஸ்வரன் தண்ணருளும், நமது குருநாதர் பேரருளும் என்றென்றும் அருள்பாலிக்க வேண்டுகிறேன்.

நறிய மலர்களாகத் திகழும் இத்தோத்திரங்களை அன்பர்கள் நாளும் ஓதி, ஸ்ரீகுமாரபரமேஸ்வரனின் திருச்செவிகளைக் குளிர்வித்து, அவன் திருவடி மலர்களை அர்ச்சித்த பயனைப் பெற்று நற்பேற்றினையும் அடையுமாறு வேண்டுகிறேன்.

**N.ஜெயராமன்**

# பொருளடக்கம்

| | | |
|---|---|---|
| 1. | குமாரஸ்தவம் | 05 |
| 2. | பகை கடிதல் | 07 |
| 3. | சண்முக கவசம் | 08 |
| 4. | பஞ்சாமிர்த வண்ணம் | 14 |
| 5. | திருத் தொடையல் | 25 |
| 6. | நவவீரர் நவரத்தினக் கலிவிருத்தம் | 30 |
| 7. | அனவரதபாராயணாஷ்டகம் | 32 |
| 8. | முதல்வன் புராணமுடிப்பு | 33 |
| 9. | அட்டாட்ட விக்கிரகலீலை | 35 |
| 10. | போற்றிவிண்ணப்பம் | 37 |
| 11. | அயிலரசு | 39 |
| 12. | தௌத்தியம் | 40 |
| 13. | ஆறெழுத்துண்மை | 42 |
| 14. | திருநெல்வேலிக்கோவில் | 43 |
| 15. | திருச்சிந்துபுரம் | 45 |
| 16. | நமன்றமர்நணுகாநெறி | 47 |
| 17. | வழிபாட்டின்மாட்சி | 48 |
| 18. | துயரறுக்குமார்க்க விளக்கம் | 50 |
| 19. | பிரப்பன் வலசை | 52 |
| 20. | திருத்தேவை | 53 |
| 21. | திருவான்மியூர் | 55 |
| 22. | தெய்வம் | 56 |
| 23. | குந்துகால் | 58 |
| 24. | பெருவேண்டுகோள் | 61 |
| 25. | திருக்கைலாயத் திருவிளையாடல் | 62 |
| 26. | சரவணப்பொய்கைத் திருவிளையாடல் | 64 |
| 27. | வேற்குழவி வேட்கை | 66 |
| 28. | சமாதான சங்கீதம் | 67 |
| 29. | குமரவேள் பதிற்றுப்பத்தந்தாதி | 76 |
| 30. | தங்க ஆனந்தக் களிப்பு | 100 |
| 31. | திருத்தணிகைமலை | 102 |
| 32. | அயலாவதுமென்னே | 103 |
| 33. | ஆதரிப்பாரெவர் | 105 |
| 34. | சரண விண்ணப்பம் | 107 |
| 35. | தோத்திரவியல் | 108 |

௳

ஓம் குமரகுருதாச குருப்யோ நம:

ஓம் குமார குருப்யோ நம:

# இறைவணக்கம்.

கங்கையென் சுதனே யென்னக் கார்த்திகை மதலா யென்னச்
சங்கரி மகனே யென்னச் சங்கரன் குருவே யென்ன
மங்கைய ரிருவோ ருந்தூ மணத்திருத் தலைவா வென்னப்
புங்கவர் பரமா வென்னப் பொலிசிவ னடிபோற் றுவலே.

# திருப்புகழ்.

வசன மிக ஏற்றி — மறவாதே
மனது துயர் ஆற்றில் — உழலாதே
இசை பயில் ஷடாக்ஷ — ரம்அதாலே
இகபர செள பாக்யம் — அருள்வாயே
பசுபதி சிவாக்யம் — உணர்வோனே
பழநிமலை வீற்ற — ருளும்வேலா
அசுரர்கிளை வாட்டி — மிகவாழ
அமரர் சிறை மீட்ட — பெருமாளே

****

# குமாரஸ்தவம்.

| | | | |
|---|---|---|---|
| 1. | ஓம் | ஷண்முக | பதயே நமோ நம: |
| 2. | ஓம் | ஷண்மத | பதயே நமோ நம: |
| 3. | ஓம் | ஷட்க்ரீவ | பதயே நமோ நம: |
| 4. | ஓம் | ஷட்க்ரீட | பதயே நமோ நம: |
| 5. | ஓம் | ஷட்கோண | பதயே நமோ நம |
| 6. | ஓம் | ஷட்கோச | பதயே நமோ நம. |
| 7. | ஓம் | நவநிதி | பதயே நமோ நம· |

| | | | |
|---|---|---|---|
| 8. | ஓம் | சுபநிதி | பதயே நமோ நம : |
| 9. | ஓம் | நரபதி | பதயே நமோ நம : |
| 10. | ஓம் | ஸுரபதி | பதயே நமோ நம : |
| 11. | ஓம் | நடச்சிவ | பதயே நமோ நம : |
| 12. | ஓம் | ஷடக்ஷர | பதயே நமோ நம : |
| 13. | ஓம் | கவிராஜ | பதயே நமோ நம : |
| 14. | ஓம் | தபராஜ | பதயே நமோ நம : |
| 15. | ஓம் | இஹபர | பதயே நமோ நம : |
| 16. | ஓம் | புகழ்முநி | பதயே நமோ நம : |
| 17. | ஓம் | ஜயஜய | பதயே நமோ நம : |
| 18. | ஓம் | நயநய | பதயே நமோ நம : |
| 19. | ஓம் | மஞ்சுள | பதயே நமோ நம : |
| 20. | ஓம் | குஞ்சரீ | பதயே நமோ நம : |
| 21. | ஓம் | வல்லீ | பதயே நமோ நம : |
| 22. | ஓம் | மல்ல | பதயே நமோ நம : |
| 23. | ஓம் | அஸ்த்ர | பதயே நமோ நம : |
| 24. | ஓம் | சஸ்த்ர | பதயே நமோ நம : |
| 25. | ஓம் | ஷஷ்டீ | பதயே நமோ நம : |
| 26. | ஓம் | இஷ்டி | பதயே நமோ நம : |
| 27. | ஓம் | அபேத | பதயே நமோ நம : |
| 28. | ஓம் | ஸுபோத | பதயே நமோ நம : |
| 29. | ஓம் | (வ்) வியூஹ | பதயே நமோ நம : |
| 30. | ஓம் | மயூர | பதயே நமோ நம : |
| 31. | ஓம் | பூத | பதயே நமோ நம : |
| 32. | ஓம் | வேத | பதயே நமோ நம : |
| 33. | ஓம் | புராண | பதயே நமோ நம : |
| 34. | ஓம் | (ப்)பிராண | பதயே நமோ நம : |
| 35. | ஓம் | பக்த | பதயே நமோ நம : |
| 36. | ஓம் | முக்த | பதயே நமோ நம : |
| 37. | ஓம் | அகார | பதயே நமோ நம : |

| | | | |
|---|---|---|---|
| 38. | ஓம் | உகார | பதயே நமோ நம : |
| 39. | ஓம் | மகார | பதயே நமோ நம : |
| 40. | ஓம் | விகாச | பதயே நமோ நம : |
| 41. | ஓம் | ஆதி | பதயே நமோ நம : |
| 42. | ஓம் | பூதி | பதயே நமோ நம : |
| 43. | ஓம் | அமார | பதயே நமோ நம : |
| 44. | ஓம் | குமார | பதயே நமோ நம : |

## பகைகடிதல்.

திருவளர் சுடருருவே சிவைகர மமருருவே
அருமறை புகழுருவே யறவர்க டொழுமுருவே
இருடபு மொளியுருவே யெனநினை யெனதெதிரே
குருகுகள் முதன்மயிலே கொணர்தியு னிறைவனையே. 1

மறைபுக ழிறைமுனரே மறைமுதல் பகருருவே
பொறைமலி யுலகுருவே புனநடை தருமுருவே
இறையிள முகவுருவே யெனநினை யெனதெதிரே
குறைவறு திருமயிலே கொணர்தியு னிறைவனையே. 2

இதரர்கள் பலர்பொரவே யிவணுறை யெனதெதிரே
மதிரவி பலவெனதோ் வளர்சர ணிடையெனமா
சதுரொடு வருமயிலே தடவரை யசைவுறவே
குதிதரு மொருமயிலே கொணர்தியு னிறைவனையே. 3

பவநடை மனுடர்முனே படருறு மெனதெதிரே
நவமணி நுதலணியோர் நகைபல மிடறணிமால்
சிவணிய திருமயிலே திடனொடு நொடிவலமே
குவலயம் வருமயிலே கொணர்தியு னிறைவனையே. 4

அழகுறு மலர்முகனே யமரர்கள் பணிகுகனே
மழவுரு வுடையவனே மதிநனி பெரியவனே
இழவில ரிறையவனே யெனநினை யெனதெதிரே
குழகது மிளிர்மயிலே கொணர்தியு னிறைவனையே. 5

இணையறு மறுமுகனே யிதசசி மருமகனே
இணரணி புரள்புயனே யெனநினை யெனதெதிரே
கணபண வரவுரமே கலைவுற வெழுதருமோர்
குணமுறு மணிமயிலே கொணர்தியு னிறைவனையே. 6

எளியவெ னிறைவகுகா வெனநினை யெனதெதிரே
வெளிநிகழ் திரள்களைமீன் மிளிர்சினை யெனமிடைவான்
பளபள வெனமினுமா பலசிறை விரிதருநீள்
குளிர்மணி விழிமயிலே கொணர்தியு னிறைவனையே. 7

இலகயில் மயில்முருகா வெனநினை யெனதெதிரே
பலபல களமணியே பலபல பதமணியே
கலகல கலவெனமா கவினொடு வருமயிலே
குலவிடு சிகைமயிலே கொணர்தியு னிறைவனையே. 8

இகலறு சிவகுமரா வெனநினை யெனதெதிரே
சுகமுனி வரரெழிலார் சுரர்பலர் புகழ்செயவே
தொகுதொகு தொகுவெனவே சுரநட மிடுமயிலே
குகபதி யமர்மயிலே கொணர்தியு னிறைவனையே. 9

கருணைபெய் கனமுகிலே கடமுனி பணிமுதலே
அருணைய னரனெனவே யகநினை யெனதெதிரே
மருமல ரணிபலவே மருவிடு களமயிலே
குருபல வவிர்மயிலே கொணர்தியு னிறைவனையே. 10

*இத்திருப்பத்தைக் காலை மாலை பூசித்துப் பத்தி பிறங்கப் பாடுவோர், திருமயில் மீது செவ்வேட் பரமனைத் தரிசிப்பர்; பகையை வெல்வர். சண்முககவச பாராயணத்திற்கு இது வேறாம்.*

## சண்முக கவசம்.

அண்டமாய் அவனி யாகி அறியொணாப் பொருள தாகித்
தொண்டர்கள் குருவு மாகித் துகளறு தெய்வ மாகி
எண்திசை போற்ற நின்ற என்னருள் ஈச னான
திண்திறல் சரவ ணத்தான் தினமுமென் சிரசைக் காக்க. 1

ஆதியாங் கயிலைச் செல்வன் அணிநெற்றி தன்னைக் காக்க
தாதவிழ் கடப்பந் தாரான் தானிரு நுதலைக் காக்க
சோதியாந் தணிகை யீசன் துரிசிலா விழியைக் காக்க
நாதனாங் கார்த்தி கேயன் நாசியை நயந்து காக்க. 2

இருசெவி களையுஞ் செவ்வேள் இயல்புடன் காக்க வாயை
முருகவேள் காக்க நாப்பல் முழுதுநற் குமரன் காக்க
துரிசறு கதுப்பை யானைத் துண்டனார் துணைவன் காக்க
திருவுடன் பிடரி தன்னைச் சிவசுப்ர மணியன் காக்க. 3

ஈசனாம் வாகு லேயன் எனதுகந் தரத்தைக் காக்க
தேசுறு தோள்வி லாவுந் திருமகள் மருகன் காக்க
ஆசிலா மார்பை ஈராறு ஆயுதன் காக்க என்றன்
ஏசிலா முழங்கை தன்னை எழிற்குறிஞ் சிக்கோன் காக்க 4

உறுதியாய் முன்கை தன்னை உமையிள மதலை காக்க
தறுகண் ஏறிடவே என்கைத் தலத்தைமா முருகன் காக்க
புறங்கையை அயிலோன் காக்க பொறிக்கர விரல்கள் பத்தும்
பிறங்குமால் மருகன் காக்க பின்முது கைச்சேய் காக்க. 5

ஊண்நிறை வயிற்றை மஞ்ஞை ஊர்தியோன் காக்க வம்புத்
தோள்நிமிர் சுரேசன் உந்திச் சுழியினைக் காக்க குய்ய
நாணினை அங்கி கௌரி நந்தனன் காக்க பீஜ
ஆணியைக் கந்தன் காக்க அறுமுகன் குதத்தைக் காக்க. 6

எஞ்சிடாது இடுப்பை வேலுக்கு இறைவனார் காக்க காக்க
அஞ்சக னம்ஒரி ரண்டும் அரன்மகன் காக்க காக்க
விஞ்சிடு பொருள்காங் கேயன் விளரடித் தொடையைக் காக்க
செஞ்சரண் நேச ஆசான் திமிருமுன் தொடையைக் காக்க 7

ஏரகத் தேவன் என்தாள் இருமுழங் காலும் காக்க
சீருடைக் கணைக்கால் தன்னைச் சீரலை வாய்த்தே காக்க
நேருடைப் பரடு இரண்டும் நிகழ்பரங் கிரியன் காக்க
சீரிய குதிக்கால் தன்னைத் திருச்சோலை மலையன் காக்க. 8

ஐயுறு மலையன் பாதத்து அமர்பத்து விரலுங் காக்க
பையுறு பழநி நாத பரன்அகங் காலைக் காக்க
மெய்யுடன் முழுதும் ஆதி விமலசண் முகவன் காக்க
தெய்வ நாயக விசாகன் தினமுமென் நெஞ்சைக் காக்க 9

ஒலிஎழ உரத்த சத்தத் தொடுவரு பூதப் ரேதம்
பலிகொள் இராக்க தப்பேய் பலகணத்து எவை யானாலுங்
கிலிகொள எனைவேல் காக்க கெடுபரர் செய்யும் சூன்யம்
வலியுள மந்த்ர தந்த்ரம் வருத்திடாது அயில்வேல் காக்க. 10

ஓங்கிய சீற்ற மேகொண்டு உவணிவில் வேல்சூ லங்கள்
தாங்கிய தண்டம் எஃகம் தடிபரசு ஈட்டி யாதி
பாங்குடை ஆயு தங்கள் பகைவரென் மேலே யோச்சின்
தீங்குசெய் யாமல் என்னைத் திருக்கைவேல் காக்க காக்க. 11

ஔவிய முளருன் உண்போர் அசடர்பேய் அரக்கர் புல்லர்
தெவ்வர்கள் எவரா னாலுந் திடமுடன் எனைமற் கட்டத்
தவ்வியே வருவா ராயிற் சராசர மெலாம்பு ரக்குங்
கவ்வுடைச் சூர சண்டன் கையயில் காக்க காக்க. 12

கடுவிடப் பாந்தள் சிங்கம் கரடிநாய் புலிமா யான
கொடியகோ ணாய்கு ரங்கு கோலமார்ச் சாலம் சம்பு
நடையுடை எதனா லேனும் நான் இடர்ப் பட்டி டாமற்
சடுதியில் வடிவேல் காக்க சானவி முளைவேல் காக்க. 13

ஙகரமே போல்த ழீஇ ஞானவேல் காக்க வன்புள்
சிகரிதேள் நண்டுக் காலி செய்யன்ஏ றாலப் பல்லி
நகமுடை யோந்தி பூரான் நளிவண்டு புலியின் பூச்சி
உகமிசை இவையால் எற்கோர் ஊறிலாது ஐவேல் காக்க. 14

சலத்திலுய் வன்மீன் ஏறு தண்டுடைத் திருக்கை மற்றும்
நிலத்திலுஞ் சலத்தி லுந்தான் நெடுந்துயர் தரற்கே யுள்ள
குலத்தினால் நான்வ ருத்தம் கொண்டிடாது அவ்வவ் வேளை
பலத்துடன் இருந்து காக்க பாவகி கூர்வேல் காக்க. 15

ஞமலியம் பரியன் கைவேல் நவக்கிர கக்கோள் காக்க
சுமவிழி நோய்கள் தந்த சூலைஆக் கிராண ரோகம்
திமிர்கழல் வாதம் சோகை சிரமடி கர்ண ரோகம்
எமையணு காம லேபன் னிருபுயன் சயவேல் காக்க. 16

டமருகத்து அடிபோல் நைக்குந் தலையிடி கண்ட மாலை
குமுறுவிப் புருதி குன்மம் குடல்வலி ஈழை காசம்
நிமிரொணாது இருத்தும் வெட்டை நீர்ப்பிர மேகம் எல்லாம்
எமையடை யாம லேகுன் றெறிந்தவன் கைவேல் காக்க. 17

இணக்கமில் லாத பித்த எரிவுமா சுரங்கள் கைகால்
முணக்கவே குறைக்குங் குஷ்டம் மூலவெண் முளைதீ மந்தம்
சணத்திலே கொல்லுஞ் சன்னி சாலமென்று அறையு மிந்தப்
பிணிக்குலம் எனையா ளாமற் பெருஞ்சத்தி வடிவேல் காக்க. 18

தவனமா ரோகம் வாதம் சயித்தியம் அரோச கம்மெய்
சுவறவே செய்யும் மூலச் சூடிளைப் புடற்று விக்கல்
அவதிசெய் பேதி சீழ்நோய் அண்டவா தங்கள் சூலை
எவையுமென் னிடத்தெய் தாமல் எம்பிரான் திணிவேல் காக்க. 19

நமைப்புறு கிரந்தி வீக்கம் நணுகிடு பாண்டு சோபம்
அமர்த்திடு கருமை வெண்மை யாகுபஃ றொழுநோய் கக்கல்
இமைக்குமுன் னுறுவ லிப்போடு எழுபுடைப் பகந்த ராதி
இமைப்பொழு தேனு மென்னை எய்தாமல் அருள்வேல் காக்க. 20

பல்லது கடித்து மீசை படபடென் றேது டிக்கக்
கல்லினும் வலிய நெஞ்சங் காட்டியே யுருட்டி நோக்கி
எல்லினுங் கரிய மேனி எமபடர் வரினும் என்னை
ஒல்லையில் தார காரி ஓம்ஐம் ரீம்வேல் காக்க. 21

மண்ணிலும் மரத்தின் மீதும் மலையிலும் நெருப்பின் மீதும்
தண்ணிறை ஜலத்தின் மீதுஞ் சாரிசெய் யூர்தி மீதும்
விண்ணிலும் பிலத்தி னுள்ளும் வேறெந்த விடத்து மென்னை
நண்ணிவந் தருளார் சஷ்டி நாதன்வேல் காக்க காக்க. 22

யகரமே போற்கு லேந்து நறும்புயன் வேல்முன் காக்க
அகரமே முதலாம் ஈராறு அம்பகன் வேல்பின் காக்க
சகரமோ டாறு மானோன் தன்கைவேல் நடுவில் காக்க
சிகரமின் தேவ மோலி திகழ்ஐவேல் கீழ்மேல் காக்க. 23

ரஞ்சித மொழிதே வானை நாயகன் வள்ளி பங்கன்
செஞ்சய வேல்கி ழக்கில் திறமுடன் காக்க அங்கி
விஞ்சிடு திசையில் ஞான வீரன்வேல் காக்க தெற்கில்
எஞ்சிடாக் கதிர்கா மத்தோன் இகலுடைக் கரவேல் காக்க. 24

லகரமே போற்கா ளிங்கன் அல்லுடல் நெளிய நின்று
தகரமர்த் தனமே செய்த சங்குஅரி மருகன் கைவேல்
நிகழெனை நிருதி திக்கில் நிலைபெறக் காக்க மேற்கில்
இகலயில் காக்க வாயு வினிற்குகன் கதிர்வேல் காக்க. 25

வடதிசை தன்னில் ஈசன் மகனருட் டிருவேல் காக்க
விடையுடை யீசன் திக்கில் வேதபோ தகன்வேல் காக்க
நடக்கையில் இருக்கு ஞான்று நவில்கையில் நிமிர்கையில் கீழ்க்
கிடக்கையில் தூங்கு ஞான்று கிரிதுளைத் துளவேல் காக்க. 26

இழந்துபோ காத வாழ்வை ஈயுமுத் தையனார் கைவேல்
வழங்குநல் ஊண்உண் போதும் மால்விளை யாட்டின் போதும்
பழஞ்சுரர் போற்றும் பாதம் பணிந்துநெஞ் சடக்கும் போதும்
செழுங்குணத் தோடே காக்க திடமுடன் மயிலுங் காக்க. 27

இளமையில் வாலி பத்தில் ஏறிடு வயோதி கத்தில்
வளரறு முகச்சி வன்தான் வந்தெனைக் காக்க காக்க
ஒளியெழு காலை முன்எல் ஓம்சிவ சாமி காக்க
தெளிநடு பிற்ப கல்கால் சிவகுரு நாதன் காக்க. 28

இறகுடைக் கோழித் தோகைக்கு இறைமுன் இராவில் காக்க
திறலுடைச் சூர்ப்ப கைத்தே திகழ்பின் இராவில் காக்க
நறவுசேர் தாள்சி லம்பன் நடுநிசி தன்னிற் காக்க
மறைதொழு குழகன் எங்கோன் மாறாது காக்க காக்க 29

இனமெனத் தொண்ட ரோடும் இணக்கிடுஞ் செட்டி காக்க
தனிமையில் கூட்டந் தன்னில் சரவண பவனார் காக்க
நனியனு பூதி சொன்ன நாதர்கோன் காக்க இத்தைத்
கனிவொடு சொன்ன தாசன் கடவுள்தான் காக்க வந்தே. 30

**சண்முக கவசம் பற்றி ஸ்ரீமத் பாம்பன் சுவாமிகள் :**

*இதனை வாற்சல்லிய விசுவாசத்துடன் நாளொன்றுக் காறுமுறை படிப்பவர்கள் எத்தகைய துன்பினின்றும் விடுதலையுறுவார்கள், முடிவில் முத்தியுமடைவார்கள். இரவில் வழிநடக்கும்போதும், வனத்திற் செல்லும்போதும், நோயால் வருந்தும்போதும், யர்தானுமொரு பயங்கரமான துன்பத்தி லகப்பட்டுக் கொண்டபோதும், நித்திரை செய்ய ஆரம்பிக்கும்போதும், மரண காலத்திலும் இக்கவசம் படிக்கப்படுமாயின் யாதொரு துன்பமில்லையென்க.*

*"பரிவிற் பெரியாய்! நீ பாராயணஞ் செய்கின்ற மகா மகிமை யுடையச் சண்முக கவசம் ஒன்று மட்டுமே நின்னைக் காத்து அக்கதியிற் சேர்க்குமே."*
*-2-ஆம் செவியறிவுறூஉ*

*"இன்னலங்கடலுட் பட்டார் பலரையு மெடுத் தருளிய மகிமை யுடைய 'அண்டமாயவனியாகி" என்பதாதியாய் அகாராதினகாரந்தந் தொடக்கமாய் வரூஉம் 30-செய்யுளாகிய சண்முக கவசம் நாளொன்றற்கு 6-முறை படிக்கப்படுமுறையிற் பரம மந்திர பரமௌட தமுமாம்."*
*- திட்பஉரை*

*"நோய், வறுமை, பகை, பயங்கரம், பாவம், அவமிருத்து முதலியன நிவாரணார்த்தம் "அண்டமாயவனியாகி" என்பதாதியாய் அகராதி னகாரந்தந் தொடக்கமாய் வரூஉம் 30-செய்யுளாகிய சண்முக கவசமும் ஒருமுறை பாராயணஞ் செய்யத் தக்கது. மிக்க துன்ப நீக்கத்தின் பொருட்டாயின் நாளொன்றற்குப் பாராயணம் ஆறுமுறை செய்தல் வேண்டும்."*
*-சிவஞான தீபம்.*

**பாராயணமுறை**

*"கவசச் செய்யுள்களுட் சிலவற்றைவிட்டுச் சிலவற்றைக் கூறலும், இடையிலெவரோடேனும் பேசலுங் கூடாது. முன்பின் மாறிப் படித்தலுமாகாது, மந்திர மாறுபாடுபோல விபரீதமாமாகலின்."*
*26.01.1926 - சிறுநூல் திரட்டு*

# பரிபூஜன பஞ்சாமிர்த வண்ணம்.

## 1. பால்.

தனந்த தந்தன தனந்தனா
தனந்த தந்தன தனந்தனா
தனந்த தந்தன தனந்தனா
தனந்த தந்தன தனந்தனா

தந்தந் தந்தன தந்தானா
தந்தந் தந்தன தந்தானா
தந்தந் தந்தன தந்தானா
தந்தந் தந்தன தந்தானா

தாந்த தந்தனனா தன தாந்த தந்தனனா
தாந்த தந்தனனா தன தாந்த தந்தனனா

தனந்த தந்தன தனந்த தந்தன
தனந்த தந்தன தனந்தனா
தனந்த தந்தன தனந்த தந்தன
தனந்த தந்தன தனந்தனா
-தனதனதனதானா.

இலங்கு நன்கலை விரிஞ்சனோ
டனந்த னுஞ்சத மகன்சதா
வியன்கொ டம்பியர் களும்பொனா
டுறைந்த புங்கவர் களுங்கெடா

தென்றுங் கொன்றைய ணிந்தோனார்
தந்தண் டின்றிர ளுஞ்சேயா
மென்றன் சொந்தமி னுந்தீதே
தென்றங் கங்கணி கண்டோயா

தேந்து வன்படைவேல் வலி சேர்ந்த திண்புயமே
யேய்ந்த கண்டகர்கா றொடை மூஞ்சி சந்தரமோ

டெலும்பு றுந்தலை களுந்து ணிந்திட
வடர்ந்த சண்டைக டொடர்ந்துபே
யெனுங்கு ஹுங்குக ணிணங்க ளுண்டரன்
மகன்பு றஞ்சய மெனுஞ்சொலே

- களமிசையெழுமாறே. (1/4)

துலங்கு மஞ்சிறை யலங்கவே
விளங்க வந்தவொர் சிகண்டியே
துணிந்தி ருந்துயர் கரங்கண்மா
வரங்கண் மிஞ்சிய விரும்புகூர்

துன்றுந் தண்டமொ டம்பீர்வாள்
கொண்டண் டங்களி னின்றூடே
சுண்டும் புங்கம ழிந்தேலா
தஞ்சும் பண்டசு ரன்குதே

சூழ்ந்தெ ழும்பொழுதே கரம் வாங்கி யொண்டிணிவே
றூண்டி நின்றவனே கிளை யோங்க நின்றுளமா

துவந்து வம்பட வகிர்ந்து வென்றதி
பலம்பொ ருந்திய நிரஞ்சனா
சுகங்கொ ளுந்தவர் வணங்கு மிங்கித
முகந்த சுந்தர வலங்க்ருதா

- அரிபிரமருமேயோ. (1/2)

அலைந்து சந்தத மறிந்திடா
தெழுந்த செந்தழ லுடம்பினா
ரடங்கி யங்கமு மிறைஞ்சியே
புகழ்ந்த வன்றுமெய் மொழிந்தவா

அங்கிங் கென்பத றுந்தேவா
யெங்குந் துன்றிநி றைந்தோனே
யண்டுந் தொண்டர்வ ருந்தாமே
யின்பந் தந்தரு ளுந்தாளா

ஆம்பி தந்திடுமா மணி பூண்ட வந்தளையா
வாண்ட வன்குமரா வெனை யாண்ட செஞ்சரணா

அலர்ந்த விந்துள வலங்க லுங்கடி
செறிந்த சந்தன சுகந்தமே
யணிந்து குன்றவர் நலம்பொ ருந்திட
வளர்ந்த பந்தனை யெனும்பெணாள்

- தனையணைமணவாளா, (3/4)

குலுங்கி ரண்டுமு கையுங்களா
ரிருண்ட கொந்தள வொழுங்கும்வேல்
குரங்கு மம்பக மதுஞ்செவா
யதுஞ்ச மைந்துள மடந்தைமார்

கொஞ்சும் புன்றொழி லுங்காலோ
ருஞ்சண் டன்செய லுஞ்சூடே
கொண்டங் கம்பட ருஞ்சீழ்நோ
யண்டந் தந்தம்வி ழும்பாழ்நோய்

கூன்செ யும்பிணிகால் கரம் வீங்க முங்கலும்வாய்
கூம்ப ணங்குகணோய் துயர் சார்ந்த புன்கணுமே

குயின்கொ ளுங்கடல் வளைந்த விங்கெனை
யடைந்தி டும்படி யினுஞ்செயேல்
குவிந்து நெஞ்சமு ளணைந்து நின்பத
நினைந்து யும்படி மனஞ்செயே

- திருவருண்முருகோனே. (1)

## 2. தயிர்.

தனத்தன தந்தன தனத்தன தந்தன
தனத்தன தந்தன தனத்தன தந்தன
தா தனனா தனனா தனனா

தனந்த தந்தன தனந்த தந்தன
தனந்த தந்தன தனந்த தந்தன
தா தனனா தனனா தனனா

- தனதனதனதானா.

கடித்துண ரொன்றிய முகிற்குழ லுங்குளிர்
    கலைப்பிறை யென்றிடு நுதற்றில கந்திகழ்
        கா சுமையா ளிளமா மகனே

களங்க விந்துவை முனிந்து நன்கது
    கடந்து விஞ்சிய முகஞ்சி றந்தொளி
        கா லயிலார் விழிமா மருகா

- விரைசெறியணிமார்பா. (1/8)

கனத்துயர் குன்றையு மிணைத்துள கும்பக
    லசத்தையும் விஞ்சிய தனத்திசை மங்கைகொள்
        கா தலனான் முகனா டமுதே

கமழ்ந்த குங்கும நரந்த முந்திமிர்
    கரும்பெ னுஞ்சொலை யியம்பு குஞ்சரி
        கா வலனே குகனே பரனே

- அமரர்கடொழுபாதா. (1/4)

உடுக்கிடை யின்பணி யடுக்குடை யுங்கன
    யுரைப்புயர் மஞ்சுறு பதக்கமொ டம்பத
        வோ வியநூ புரமோ திரமே

ருயர்ந்த தண்டொடை களுங்க ரங்களி
    லுறும்ப சுந்தொடி களுங்கு யங்களி
        லூ ரெழில்வா ரொடுநா சியிலே

- மினுமணிநகையோடே. (3/8)

உலப்பறி லம்பக மினுக்கிய செந்திரு
    வுருப்பணி யும்பல தரித்தடர் பைந்தினை
        யோ வலிலா வரணே செயுமா

றொழுங்கு றும்புன மிருந்து மஞ்சுல
    முறைந்த கிஞ்சுக நறுஞ்சொ லென்றிட
        வோ லமதே யிடுகா ணவர்மா

- மகளெனுமொருமானாம். (1/2)

**ம**டக்கொடி முன்றலை விருப்புடன் வந்ததி
வனத்துறை குன்றவ ருறுப்பொடு நின்றிள
மா னினியே கனியே யினிநீ

வருந்து மென்றனை யணைந்து சந்தத
மணங்கு ளிர்ந்திட விணங்கி வந்தரு
ளாய் மயிலே குயிலே யெழிலே

- மடவனநினதோரார், (5/8)

**ம**டிக்கொரு வந்தன மடிக்கொரு வந்தனம்
வளைக்கொரு வந்தனம் விழிக்கொரு வந்தனம்
வா வெனுமோர் மொழியே சொலுநீ

மணங்கி ளர்ந்தந லுடம்பி லங்கிடு
மதங்கி யின்றுள மகிழ்ந்தி டும்படி
மான் மகளே யெனையா ணிதியே

- எனுமொழிபலநூறே, (3/4)

**ப**டித்தவ டன்கைகள் பிடித்துமு னஞ்சொன
படிக்கும ணந்தரு ளளித்தவ னந்தகிர்
பா கரனே வரனே யரனே

படர்ந்த செந்தமிழ் தினஞ்சொ லின்பொடு
பதங்கு ரங்குந ருளந்தெ ளிந்தருள்
பா வகியே சிகியூ ரிறையே

- திருமலிசமரூரா, (7/8)

**ப**வக்கட லென்பது கடக்கவு நின்றுணை
பலித்திட வும்பிழை செறுத்திட வுங்கவி
பா டவுநீ நடமா டவுமே

படர்ந்து தண்டயை நிதஞ்செ யும்படி
பணிந்த வென்றனை நினைந்து வந்தருள்
பா லனனே யெனையாள் சிவனே

- வளரயின்முருகோனே. (1)

## 3. நெய்.

தந்தந்தா தந்தந்தா தந்தந் தந்தன தந்தந்தா
தந்தந்தா தந்தந்தா தந்தந் தந்தன தந்தந்தா
தாந் தனா தனா தனா தனா

தன தன தத்தத் தனதன தத்தத்
தனதன தத்தத் தனதன தத்தத்தா

தனதன தத்தத் தனத்தனா
தன தன தத்தத் தனத்தனா
தனதன தத்தத் தனத்தனா
தனதன தத்தத் தனத்தனா

தனனா தனனா தனனா தனனா
தனனா தனனா தனனா தனனா
தனதன தனதன தனதன தனதன
தனதன தனதன தனதன தனனா
- தந்தன தனதானா

**வ**ஞ்சஞ்சு தொன்றும்பேர் துன்பஞ் சங்கட மண்டும்பேர்
மங்கும்பேய் நம்பும்பேர் துஞ்சும் புன்சொல்வ ழங்கும்பேர்
மான் கணார் பெணார் தமா லினான்

மதியது கெட்டுத் திரிபவர் தித்திப்
பெனமது துய்த்துச் சுழல்பவ ரிச்சித்தே

மனமுயி ருட்கச் சிதைத்துமே
நுகர்தின துக்கக் குணத்தினோர்
வசையுறு துட்டச் சினத்தினோர்
மடிசொல மெத்தச் சுறுக்குளோர்

வலியே றியகூ ரமுளோ ருதவார்
நடுவே துமிலா ரிழிவார் களவோர்

மணமல ரடியிணை விடுபவர் தமையினு
நணுகிட வெனைவிடு வதுசரி யிலையே
- தொண்டர்கள்பதிசேராய். (1/4)

**வி**ஞ்சுங்கார் நஞ்சந்தா னுண்டுந் திங்கள ணிந்துங்கால்
வெம்பும்போ தொண்செந்தாள் கொண்டஞ் சுஞ்சவு தைந்தும்பூ
மீன் பதா கையோன் மெய்வீ யுமா

விழியைவி ழித்துக் கடுகவெ ரித்துக்
கரியையு ரித்துத் தனுமிசை சுற்றிக்கோள்

விழைவறு சுத்தச் சிறப்பினார்
பிணைமழு சத்திக் கரத்தினார்
விஜயவு டுக்கைப் பிடித்துளார்
புரமதெ ரிக்கச் சிரித்துளார்

விதிமா தவனா ரறியா வடிவோ
ரொருபா திபெணா யொளிர்வோர் சுசிநீள்
விடைதனி லிவர்பவர் பணபண மணிபவர்
கனைகழ லொலிதர நடமிடு பவர்சேய்

- என்றுளகுருநாதா (1/2)

**த**ஞ்சஞ்சேர் சொந்தஞ்சா லஞ்செம் பங்கய மஞ்சுங்கா
றந்தந்தா தந்தந்தா தந்தந் தந்தன தந்தந்தா
தாந் ததீ ததீ ததீ ததீ

ததிமிதி தத்தித் தரிகிட தத்தத்
திரிகிட தத்தத் தெயெனந டிக்கச்சூழ்

தனிநட னக்ருத் தியத்தினாண்
மகிடனை வெட்டிச் சிதைத்துளாள்
தடமிகு முக்கட் கயத்தினாள்
சுரதனு வக்கப் பகுத்துளாள்

சமிகூ விளமோ டறுகா ரணிவா
ளொருகோ டுடையோ னனையாய் வருவாள்

சதுமறை களும்வழி படவளர் பவண்மலை
மகளென வொருபெய ருடையவள் சுதனே

- அண்டர்கடொழுதேவா. (3/4)

பிஞ்சஞ்சூழ் மஞ்சொண்சே யுஞ்சந் தங்கொள்ப தங்கங்கூர்
பிம்பம்போ லங்கஞ்சா ருங்கண் கண்களி லங்குஞ்சீ
ரோங் கவே யுலா வுகால் விணோர்

பிரமனொ டெட்டுக் குலகிரி திக்குக்
கரியொடு துத்திப் படவர வுட்கப்பார்

பிளிற நடத்திக் களித்தவா
கிரிகெட வெக்கித் துளைத்தவா
பிரியக மெத்தத் தரித்தவா
தமியனை நச்சிச் சுளித்தவா

பிணமா முனமே யருள்வா யருள்வாய்
துனியா வையுநீ கடியாய் கடியாய்
பிசியொடு பலபிழை பொறுபொறு பொறுபொறு
சததமு மறைவறு திருவடி தரவா
- என்களிமுருகோனே. (1)

## 4. சருக்கரை.

தான தந்தன தான தந்தன
தான தந்தன தான தந்தன
தான தந்தன தான தந்தன
தான தந்தன தான தந்தன

தத்தன தனதன தனத்தனா
தனந்த தத்தன தனத்தனா
தத்தன தனதன தனத்தனா
தனந்த தத்தன தனத்தனா - தனதனதனதானா.

மாத முந்தினம் வார முந்திதி
யோக மும்பல நாள்க ளும்படர்
மாதி ரந்திரி கோள்க ளுங்கழல்
பேணு மன்பர்கள் பான லந்தர

**வ**ற்சல மதுசெயு மருட்குணா
சிறந்த விற்பன ரகக்கணா
மற்புய வசுரரை யொழித்தவா
வனந்த சித்துரு வெடுத்தவா

**மா**ல யன்சுரர் கோனு மும்பரெ
லாரும் வந்தன மேபு ரிந்திடு
வான வன்சுடர் வேல வன்குரு
ஞான கந்தபி ரானெ னும்படி

மத்தக மிசைமுடி தரித்தவா
குளிர்ந்த கத்திகை பரித்தவா
மட்டறு மிகலயில் பிடித்தவா
சிவந்த வக்கினி நுதற்கணா

- சிவகுருவெனுநாதா. (1/4)

**நா**த விங்கித வேத மும்பல்பு
ராண முங்கலை யாக மங்களு
நாத னுன்றனி வாயில் வந்தன
வேயெ னுந்துணி பேய றிந்தபி

**னை**ச்சுவ திவணெது கணித்தையோ
செறிந்த ஷட்பகை கெடுத்துமே
னட்புடை யருளமிழ் துணிற்சதா
சிறந்த துத்தியை யளிக்குமே

**நா**ளு மின்புயர் தேனி னுஞ்சுவை
யீயும் விண்டல மேவ ருஞ்சுரர்
நாடி யுண்டிடு போஜ னந்தனி
லேயும் விஞ்சிடு மேக ரும்பொடு

**ந**ட்டமின் முப்பழ முவர்க்குமே
விளைந்த சர்க்கரை கசக்குமே
நற்சுசி முற்றிய பயத்தொடே
கலந்த புத்தமு தினிக்குமோ

அதையினியருளாயோ. (1/2)

பூத லந்தனி லேயு நன்குடை
மீத லந்தனி லேயும் வண்டறு
பூம லர்ந்தவு னாத வம்பத
நேய மென்பது வேதி னந்திகழ்

பொற்புறு மழகது கொடுக்குமே
யுயர்ந்த மெய்ப்பெயர் புணர்த்துமே
பொய்த்திட வினைகளை யறுக்குமே
மிகுந்த சித்திகள் பெருக்குமே

பூர ணந்தரு மேநி ரம்பெழி
லாத னந்தரு மேய ணிந்திடு
பூட ணந்தரு மேயி கந்தனில்
வாழ்வ துந்தரு மேயு டம்பொடு

பொக்கறு புகழினை யளிக்குமே
பிறந்து செத்திட றொலைக்குமே
புத்தியி லறிவினை விளக்குமே
நிறைந்த முத்தியு மிசைக்குமே

- இதைநிதமுதவாயோ. (3/4)

சீத ளஞ்சொரி கோதில் பங்கய
மேம லர்ந்திடு வாவி தங்கிய
சீர டர்ந்தவி ராவி னன்குடி
யேர கம்பர பூத ரஞ்சிவ

சித்தரு முனிவரும் வசித்தசோ
லையுந்தி ரைக்கட லடிக்கும்வாய்
செற்கண முலவிடு பொருப்பெலா
மிருந்த ளித்தரு ளயிற்கையா

தேனு றைந்திடு கான கந்தனின்
மானி ளஞ்சுதை யாலி ருஞ்சரை
சேரு டம்புத ளாட வந்தசன்
யாச சுந்தர ரூப வம்பர

சிற்பர வெளிதனி னடிக்குமா
வகண்ட தத்துவ பரத்துவா
செப்பரும் ரகசிய நிலைக்குளே
விளங்கு தற்பர திரித்துவா

- திருவளர்முருகோனே. (1)

## 5. தேன்.

தானதன தானான தானதன தானதன
தனதான தனதான தனதான தனதான - தனதன
தனதானா

சூலதர னாராட வோதிமக ளாடநனி
தொழுபூத கணமாட வரியாட வயனோடு
தூயகலை மாதாட மாநளினி யாடவுயர்
சுரரோடு சுரலோக பதியாட வெலியேறு
சூகைமுக னாராட மூரிமுக னாடவொரு
தொடர்ஞாளி மிசையூரு மழவாட வசுவீர
சூலிபதி தானாட நீலநம னாடநிறை
சுசிநார விறையாட வலிசானி ருதியாட

- அரிகரமகனோடே. (1/4)

**கா**லிலியு மேயாட வாழ்நிதிய னாடமிகு
கனஞால மகளாட வரவேணி சசிதேவி
காமமத வேளாட மாமைரதி யாடவவிர்
கதிராட மதியாட மணிநாக வரசோகை
காணுமுனி வோராட மாணறமி னாடவிரு
கழலாட வழகாய தளையாட மணிமாசில்
கானமயி றானாட ஞானவயி லாடவொளிர்
கரவாள மதுவாட வெறிசூல மழுவாட

- வயிரமலெறுழோடே. (1/2)

**கோ**லவரை ஞாணாட நூன்மரும மாடவிரை
கொளுநீப வணியாட வுடையாட வடனீடு
கோழியய ராதாட வாகுவணி யாடமிளிர்
குழையாட வளையாட வுபயாறு கரமேசில்
கோகநத மாராறொ டாறுவிழி யாடமலர்
குழகாய விதழாட வொளிராறு சிரமோடு
கூறுகலை நாவாட மூரலொளி யாடவலர்
குவடேறு புயமாட மிடறாட மடியாட

- அகன்முதுகுரமோடே. (3/4)

**நா**லுமறை யேயாட மேனுதல்க ளாடவிய
னலியாத வெழிலாட வழியாத குணமாட
நாகரிக மேமேவு வேடர்மக ளாடவரு
ணயவானை மகளாட முசுவான முகனாட
நாரதம கானாட வோசைமுனி யாடவிற
னவவீரர் புதராட வொருகாவ டியனாட
ஞானவடி யாராட மாணவர்க ளாடவிதை
நவிறாச னுடனாட விதுவேளை யெணிவாகொள்

- அருண்மலிமுருகோனே. (1)

# திருத்தொடையல்.

*அறுசீர்க்கழி நெடிலடியாசிரிய விருத்தம்.*

**அ**னந்தமறை யுன்னறிவாய் விளங்கவென வாறுமுக வடிவே காட்டித்
தனந்தனியா வந்தசிவ சரவணனே பிரணவனே சாமீ யுன்றன
மனங்கனிய யானொழுகும் வகையையுணர்ந் தெனையறிய வரமீந் தென்னைக்
கனம்படவும் வைப்பதுநின் கடனேயென் றனுதினமுங் கருதா நின்றேன். 1

**க**ம்பன்முத னற்கவிஞர்க் கரசியென விருந்தமுதிர் கலைமா தெளவை
தம்புலமைத் திடனறியக் காரெருமை மேய்த்திடுவோ னனைப்போல் வந்து
சம்புமிசை யேறிநறுங் கனியுதிர்த்துப் பரிகாசந் தனைச்செய் செவ்வேள
எமபெருமா னியாயி னுன்சீர்த்தி யானபுகல்வ தெவவா றன்றே. 2

அரிபகவ னிந்திரன்வா னவர்முனிவர் சித்தருமே யத்தா வென்றுன்
திருவடியைப் பரவியருஞ் சீர்த்திபடைத் தார்களெனத் திகழ்மா வேத
உருவனைத்து மனந்தமுறை யுரைத்துரைத்து முன்பெருமை யொழிவே யின்றிப்
பெருகுமெனிற் குகனேயிங் கதுசிறிது மேயென்னாற் பேசற் பாற்றோ. 3

கயறாவு கமலநிறை பூம்பொழில்கொள் காசிநகர்க் கடவுண் முன்பு
பயமேது மின்றிமுதற் பரமரியென் றசத்தியமே பகர்ந்தோ னீட்டு
புயமிரண்டுந் தம்பமென நின்றிடுகா னன்னடுவிற் புரக்க வேகைச்
சயவுவணி யாற்கரங்கொய் நந்திபரன் சரணஞ்செய் தனிவே லோனே. 4

வாசமலி நறுங்கடப்பந் தார்புனையுந் தடங்கரவேன் மன்னா மெந்தாய்
காசிநகர் மான்மியத்திற் கழறுவண்ண மானெறியிற் கரங்க டூக்கிப்
பேசியவொர் வியாதனைநீ மூடனெனத் திருப்பிருந்தைப் பெருமான் சொல்லி
ஈசனெமக் கொருவனுள னென்றபொரு ணியலதொன் றிலையே யாண்டும். 5

அகத்தியனக் கீரனனி தவத்தினுயர் நாரதனல் லருளே பெற்று
மிகுத்ததிருப் புகழ்புகன்ற கருத்துளனு மேனையவுண் மெய்யோ ரெல்லாம்
மகத்துவமுற் றுய்யவடி யளித்தசிவ னேயெழில்கொண் மயிலி லேறும்
பகத்தரள மேயுனது பதப்போது பழிச்சவருள் பண்ணா யெற்கே. 6

பரமலைபொற் செந்திவளம் பதியெனுநற் சாமிவரை படர்பூஞ் சோலை
விரியுமடற் கமலநிறை காண்பழநி யேனையநல் விரையார் வெற்பும்
மருமலர்ச்செம் பாதமெனு நின்கழலைத் தான்பரவென் மனமே யென்றின்
னருணிலவக் குடியிருக்க வேண்டுமயில் பரித்துளவிண் ணமர்வோ ரேறே. 7

அண்டமுத லணுக்கடையாய்க் கண்டசரா சரங்களெலா மருளா முன்றன்
பண்டமெனத் தெரிதலினா லுனக்கிவனா னிசைக்கவொரு பரிசுங் காணேன்
கொண்டதமி யேன்வணக்கந் தனைத்திருத்தி யாகவிங்கே கொள்வா யென்னா
அண்டிநின்றே னின்னடிக்கே யலம்பொலிந்த வயில்சிகண்டிக் கரசே யன்றே. 8

நின்னடித்தொண் டானதிரு மாலாதி தேவரெல்லா நின்க டைக்கண்
தன்னருளைக் கொண்டலவோ சருவநவ சித்திகளுந் தடத்த மாக
இன்னமிருந் தாற்றிடவு மிகலபடைத்தா ரேரயிற்கை யீசா வுன்றன்
நன்மையபொன் னடித்துணையோ னென்போல்வா நலமெனென நவில்வேன் மன்னோ. 9

அண்டருக்கு முனிவருக்கு மகிலநிரை படைப்பவற்கு மையார் சீவை
குண்டனுக்கும் வாழ்வேதவ் வசுரருயிர் நீவந்து குடியா விட்டாற்
பண்டுமறை நனிநுவன்ற படிதரையி லுன்னருளைப் படையார் தாவே
கொண்டுழல்வார் கதிபுகுதா ரெற்கருள்செய் யருளுருவக் குகனே யன்றே. 10

எங்குமொரு கருத்தனென விருக்குமுனைக் குலக்கடவு ளென்றே கொண்ட
புங்கவர்க ளொருகாலும் வேறுதெய்வங் குரங்கார்கள் புகரொன் றின்றி
மங்கலமுற் றுய்ந்திகத்தி லுயர்சீவன் முத்திதன்னை மருவி நின்றே
துங்கபர முத்தியையு மேபெறுவ ரிந்துளப்பூந் தொடைமார் போனே. 11

நின்மலச்செஞ் சோதிவடி வுடையவுனை யனவரத நினைப்போர்க் கென்றும்
பொன்மயச்செம் மேனியுடம் புண்டாகு நரைதிரைகள் பொருந்தா புன்கண்
தன்னுரத்தி னாலுயிர்கொள் கூற்றுமணு காதெதினுஞ் சத்தாய் நிற்குஞ்
சின்மயத்தின் றெருட்பிழம்பே யான்றொழுமோர் வேற்சமர்த்தா சிவச்சீர்க் குன்றே. 12

பிரமனைத்தாள் கொண்டுதைத்தாய் பிரணவத்தின் பொருளானாய் பிறைமா கங்கை
திருமுடிக்கண் ணணியுமுக்கட் கடவுளுக்கு முபதேசஞ் செய்தா யிந்தரன
பருவரலை நீக்கியருந் துறக்கமளித் தாய்விபுதர் பதியே யார்க்குங்
குருகுகனென் றணிமறைகள் குயிலும்வண மெனக்குமருள் குயிற்றொண ணையோ. 13

வகுத்தமுதற் சரியையொடு கிரியையுநன் றாநடக்கும் வழியா யுள்ள
அகத்தறம்வ ழாதிகத்தில் வளர்க்கவருட் சத்திதனை யருகே வைத்து
மிகுத்ததிருக் கொலுவிருப்பை யோகமுடன் ஞானமதும் மேன்மே லோங்கச்
சகத்தையிகழ் துறவறமுற் றேதவசி வடிவெடுப்பை சயவே லோனே. 14

குறமகளைக் கரிமகளை யிருமருங்கும் வதியவருள் கூர்ந்தே யென்றும்
மறமொழித்த நின்னடியார்க் கருள்செயுமா றனந்தமுக மருவா நிற்கும்
இறையுனக்கிங் கறுமுகமென் றரற்றுமணி யாயமது மென்னே பன்னும்
மறைகளுக்கு முடிவுரைத்த சிவகுருவென் றுள்ளாமன் மருணடே யன்றே. 15

திருப்பெறுநான் முகக்கிழவன் றிருநாத னுவணைவளஞ் சேர்ந்தோர் மற்றும்
உருப்படைத்த பசுக்களுக்கெல் லாஞ்சுகுர்த வபயகர முதவா நின்ற
அருட்படைத்த நினக்கனந்தங் கரங்களென வுன்னார்த் ராறு கையென்
றிருப்புரைப்ப தவிவேக மன்றோவென் னிதயநடு விருந்திட டோனே. 16

ஆறுமுகப் படுமுனநீ யைந்துமுகத் துடனிலவி யழியா நூல்கள்
கூறுமுறைப் படியதன்பின் குறைவில்சிவ சத்தியொடுங் குறைவொன் றின்றி
ஈறுமுத லொருவிடநின் றுருக்காட்ட ணாதியுன்னை யீசன் சேயென்
றூறில்லா துரைத்திடுத லுபசார மல்லால்வே றொழுங்குண் டோவே. 17

ஐந்துவகைப் படுபூத வியல்பினைக்கொண் டளவிலுல காக்கி வாங்க
ஐந்துமுகத் துடன்விளங்கி யைந்தெழுத்தி னுருவாகி யவற்றோ டுள்ள
பந்தமொன்று சால்குடிலை யருவமுக மென்பதையும் பரித்தே மஞ்ஞை
உந்துமறு முகனான வாறெழுத்துக் கிறையேயென் னுறுவ நீராய். 18

பிருதிவிகம் வாயுவனல் வெளியருக்கன் விதுவுயிராப் பிறங்கோ ரெட்டுந்
திருவுருவ மாமுனக்கென் றரியசைவ நூனுவல றெளிவே யந்தச்
சரவசர விதப்பனைத்து நின்னனவே யாகலினச் சார்நீத் தெந்தப்
பரசமய மும்வாழா தன்றோபொற் சிகியூரும் பவுள்சு ளானே. 19

சகளமதி லயனரிருத் திரன்மயேச் சுரனெனுநற் றகைத்தே வாகி
நிகரறுநிட் களசகளத் தோங்குசதா சிவனாகி நிறைவா யெங்குந்
திகழுருவ நிட்களத்தி னிமலவிந்து நாதமுமை சிவமாய் நின்றே
இகபரத்து மிருந்தரசு புரிகுகநின் னடிமதர்வி லெனைச்சே ரன்றே. 20

ஒண்கலைப்பெண் கொழுநனுமோர் வெண்பரப்பிற் றுயில்பவனு மொளிர்தீ நெற்றிக்
கண்படைத்து நல்லறத்தின் றெய்வமெனும் வெள்விடையுட் கனிந்தூர் தேவும்
பண்படைத்த வாரணஞ்சொல் வண்ணமரு ளெனுந்திரித்வ பாத்தி யந்தான்
விண்படைத்த வுனக்கல்லால் வேறுசொல்ல றிரிபாகு மிளிர்வேன் மன்னே. 21

ஆடகப்பொன் னேபணிக ளாயிருக்கு முறைமையைப்போ லான்மா வெல்லாம்
பாடுடைக்கோண் மாயையினைப் பலபேத வுடலாகப் பரித்தே நிற்கும்
பீடிருக்கு நின்வடிவ நிட்களத்தி லான்மாவாய்ப் பிறிதொன் றின்றிக்
கூடிநிற்ற லாலெவையு நின்வசமே யாமயிற்கைக் குகனே யன்றே. 22

நித்தியத்தை யுடையபசுக் களைமாயை கன்மமென நிகழ்ந்தே பற்று
நித்தியத்தை யுடையவிருண் மலப்பாச மகற்றியின்ப நீங்கா முத்தி
நித்தியத்துக் கிடமதெனு நின்பதத்தி லென்னைவைக்க நீவா ராயோ
நித்தியச்சொல் லொன்றைவந்து சொலப்பதியென் றேயான நெடுவேன் மன்னே. 23

உலப்புதிப்பி லாவுனடி யடைதலன்றிக் கதிபிறிதொன் றுண்டே யென்று
பலத்துழல்வ தேபெருத்த வஞ்ஞான மஞ்ஞானம் பரமார்த் தத்தைத்
தலத்திலுறை பசுக்கடரத் தளவாக வருளவுருத் தானே காட்டு
நலக்கடவு ளேயெனது நவைதீர்க்க வொகரமதி னடியா யன்றே. 24

பரங்கடலென் றதன்குமிழி யொளிர்பசுவென் றதுதகரப் படர்நீ ரொன்றாய்த்
திரம்படல்போன் முத்தியென்று விளம்பினவர் கருத்தைநனி தெளியா ரெல்லாம்
புரந்தரனச் சுதன்பணியுன் பதஞ்சேரன் முத்தியெனப் பொருள்கா ணாதிங்
கருத்துயர மடைதலன்றிப் பெறும்பயனென் னறுங்கடம்பை யணிமா தேவே.25

பெரிதினுக்கெ லாம்பெரிய சிவனடிய ருள்ளடக்கம் பெறுவா னென்னா
அரியவெளவை சொன்னபடி நின்னடிய ருள்ளடக்க மரவா யன்னோர்
திருவடியை யடிமைமுடி பொருந்துமெனிற் பிரமலிபி சிதைவா காதோ
சரவணசன் மயதுரிய வமலசிவ னேகருணை தாராய் மன்னோ. 26

தண்ணிருக்கும் பூங்கமல சுமனசமெல் லாமுனிந்து தாதெய் யென்று
விண்ணடிக்க மண்ணடிக்கக் கிங்கிணியு நூபுரமு மேலே தாங்கிக்
கண்ணிருக்கு மெய்த்தவசர் முன்னடிக்கு நின்சரணென் கருத்தாய் நிற்கப்
பண்ணியவென் னோன்மை யென்சொல் குக்குடப்ப தாகையுடைப் பரனே முன்னே. 27

இனித் தவலர் முடித்தசுர ரெவர்க்குமருட் குருவெனவுற் றிருந்தா யன்றி
உனக்கொருவ ரிருக்கவிருந் திலையாத லாலுனடி யுளமே கொண்ட
கனத்தவடி யவருடைய கழற்கமல முள்ளுகினுங் கறைபோ மீண்டு
செனிப்பதுவு மிப்பதுவு மொழிந்திடுமே குறக்கொடியைச் சேர்ந்திட் டோனே. 28

சொலற்கரிய விழுப்பொருளென் றடிக்கடிசொல் லாரணங்க டுதியே பண்ண
நிலைப்புடைய குருத்துவமு மருட்கடலு மாரமுது நினைவோர் நெஞ்சஞ்
சலப்படவி டாதிருக்கை விளக்கறிவு மாயிருக்குந் தனிவே லீசா
குலக்கடவு ளாயெனக்கன் றதிர்த்தபடி யேயருள்செய் குணமாய் வந்தே. 29

தமருகத்தை மூவிலையை யெழிற்பிணையைப் பிடித்ததிருச் சயமா தேவன
அமர்கயிலைப் பதியெமக்குத் திருக்கோயி லெனனினுமெம் மடியார் நெஞ்சே
எமதிருப்பென் றெஞ்ஞான்று மிருந்தெங்கு மேநிறைந்த விறையே யிந்தக்
**குமரகுரு தாசனைக்**கை விட்டுவிடா மறகாததுக் கோடி யன்றே. 30

*ஸ்ரீவிசாகப் பெருமாளுக்குரிய விரத தினங்களிலும் மற்றைத் தினங்களிலும் இத்திருத்தொடையல் பாடும் போழ்து கவிக்கொரு கர்ப்பூர தீபமேற்றுக.*

# நவவீரர் நவரத்தினக்கலிவிருத்தம்.

## வீரவாகுதேவர் - மாணிக்கம்.

சீர றாமுருக வேளுறை செழுமை
ஆர றாநிலய வாரியி லமரேண்
நார றாவுழுவ லேறிடு நலிவில்
வீர வாகுவெனும் வீரனை விழைவாம். 1

## வீரகேசரிதேவர் - தரளம்.

என்னை யாளிறை யாயுல கெங்கணும்
மன்னு கந்தபி ரான்மந்தி ரத்திடை
மின்னு வாழ்க்கைய றாவீர கேசரி
தன்னை யுள்ளன்பிற் றாழ்வர்க்கின் றூழலே. 2

## வீரமகேந்திரதேவர் - புட்பராகம்.

ஓதரும் வீரம கேந்திர னொருவன்
பாதமு ளேபடர் மாந்தர பரமீ
ஆதரம் வியம தாந்தரங் கருதுஞ்
சூதம காமர மீர்ந்ததோ மரவேள். 3

## வீரமகேசதேவர் - கோமேதகம்.

அரணத் திறையோ னையனா ரதமேன்
கரணத் தெனுவார் கவனூ றிடுவான்
முரணிற் பொருசூ ரனொடே முனைவோன்
சரணச் சுகவீ ரமகே சனரோ. 4

## வீரபுரந்தரதேவர் - வைடூரியம்.

திகையெலா நீக்கமி லாது செறிந்தபெருந்
தகையெலா மேற்றவிர் சாமி பதம்பரவாப்
பகையெலா நீக்கொரு பாடு பிறந்துளுவார்
மிகையெலாம் வீட்டிடும் வீர புரந்தரனே. 5

## வீரராக்கததேவர் - வயிரம்.

வீவயன மிலாமேல் வீட்டுநெறியை நேடும்
ஆவலறவர் வாழ்வா னாட்டுமுருக வேளின்
தாவிலருள்கொள் வீர ராக்கதனடி தாழ்வார்
தேவருமறி யாவோர் சீர்த்தியிலுயர் வாரால். 6

## வீரமார்த்தாண்டதேவர் - மரகதம்.

தாமத மெற்றிடு மாசில் சார்ச்சேந்தன்
சேமவ டிக்களி யாமொர் சீர்ச்சார்ந்தோர்
மாமிடன் மிக்குடை வீர மார்த்தாண்டன்
பூமன நச்சுநர் போதம் போய்க்காண்பார். 7

## வீராந்தகதேவர் - பவளம்.

மள்ளலே றேண்சிகி யிவரு மஞ்சனை
உள்ளுவோ ரோங்கவ னுணர்வு சந்ததங்
கொள்ளுவீ ராந்தக னினைவு கொண்டிடின்
தள்ளுவார் காண்கணத் தறுகண் யாவையும். 8

## வீரதீரதேவர் - நீலம்.

ஆரெப்படி முனினும்மது போலத்திரு வருள்கூர்
நாரப்பெரு மானாயழ னாகப்பெய ரானாள்
தாரப்பொருள் வேலற்பணி தகைமைக்குண வீர
தீரப்பெய ரோனைப்புகழ் தெருளர்க்கிலை சிறுகே. 9

*கந்தசஷ்டி முதலிய மாவிரத வழிபாடுகளில் வழுத்துமாறு பாம்பன்: ஸ்ரீமத் - குமரகுருதாச சுவாமிகள் அருளிச் செய்த நவவீரர் நவரத்தினக் கலிவிருத்தம் முற்றிற்று.*

*கலிக்கொரு கர்ப்பூர தீபமேற்றுக.*

# அனவரதபாராயணாஷ்டகம்.

## கலிவிருத்தம். பண் - முதிர்குறிஞ்சி

**ம**ன்றெனும் பதியுறை மழவிப முகவனு
நன்றெனும் பிரணவ வவனிளை ஞனுமறை
தொன்றெனும் பொருளெனச் சுடர்சிவ னுமுமையு
மொன்றெனும் பெரியவ ருயர்பதம் பணிவேன். 1

**அ**ள்ளுலை யாப்படை யறுமுக வனுமனந்
துள்ளுலை வோட்டுதண் சுடரணி பரமனும்
வள்ளுலை யாக்கிரி மகளுமைங் கரனுமெ
னுள்ளுலை யாப்பொரு ளொன்றெனத் தொழுதேன். 2

**ஆ**தித்தன் மதியன லாகுமுந் நயனனஞ்
சோதித்தண் முகவுமை தோமிலைங் கரன்முரண்
காதித்தன் களிதரு கடம்பனொன் றெனுநிச
மோதித்தண் ணளிமிக வுறுதுயர் களைவேன். 3

மயல்களை சிவையையு மதகரி முகனையு
மயல்களை யயிலரச னையுமொன் னலர்கடம்
மியல்களை சிவனையு மொருபொரு ளெனினிடர்ப்
புயல்களை யருளுறு மெனநனி புகழ்வேன். 4

**மா**லொடு விதியறி யாதசெம் மரைமலர்க்
காலொடு நவிரமு மாரிறை களியுமை
வேலொடு வருகுக வேள்கள பமுகன்மெய்
வாலொடு மிளிரறி வினிதென மகிழ்வேன். 5

**தி**ருவருள் புரியுமைங் கிலீந்திரி புரைபரை
குருவருள் புரிசௌங் கிரீஞ்சிவை குகனிட
ரொருவருள் புரிபத விநாயக னுயர்சிவ
னருவருள் புரிபதி யாயெனைக் காக்க. 6

**வா**ணுதன் மடப்பிடி மலைப்புன மானலம்
பேணுதல் விழிச்சர வணபவப் பெருந்தகை
மாணுத னயனகங் கணபதி வளரனல்
காணுத லரனுமை யருளெனைக் காக்க. 7

**பா**மகண் மறைபுக ழோங்கண பதியெழிற்
சீமக ணனிபுக ழோநமச் சிவாயவை
பூமகள் புகழுமை பூம்புகழ்க் கவியிறை
யேமக கனவருள் காத்தருள் கெனையே. 8

## முதல்வன்புராணமுடிப்பு.

அந்தாதி.

**கலிவிருத்தம். (இசை)**

**ச**ந்திர சேகரன் றழற்கண் ணேபொறி
வந்தன வாறவை மாசில் கங்கைசார்ந்
தைந்துட னொன்றணை குழவி யாகியா
றந்தநன் மாதர்க ளமுத முண்டவே. 1

**உ**ண்டவை பலபல வுருவங் காட்டுபு
பண்டுமை யாலொரு படிவ மாயவள்
கண்டென வருத்தமு துண்டு காமர்செய்
அண்டவொண் கயிலைசென் றாடல் செய்யுமால். 2

**ஆ**டலில் வெஞ்சுட ரசுவ மேறிய
தீடணை யம்புலி யிரத மூர்ந்தது
மூடமி லிந்திரன் முதலி னோர்கரி
சேடண வூர்ந்தது செம்பொற் சேயரோ. 3

**செ**ங்கரு டன்புலி சீய மோதிமஞ்
சங்குற ழேறுழை சரபம் யாடிவர்ந்
தெங்கணு மேகிய தெழில்கொ ளெந்நில
மங்கைய ரும்விழை மகிமைப் பிள்ளையே. 4

**பி**ள்ளைமை நீத்தொரு பெருவ யோதிகம்
உள்ளவ னாய்ச்சுர ருலகை நன்குசெய்
உள்ளமொ டங்ஙன முலாவி னான்வன
நள்ளிட னடைந்துகின் னரஞ்செய் தானவன். 5

**செ**ய்யத னோசையிற் சேர்வி லங்குபுள்
மெய்யைம றந்தன வேய்ங்கு ழற்றொனி
ஐயனெ முப்பின னகலுண் மாதர்கள்
மையல்செய் விரகமுள் வருந்த நாளுமே. 6

**மே**லட ரண்டமு மேய சேயவன்
மாலுடல் வரையிடை வந்து வானவர்
பாலுறு வலிகளைப் பாறச் செய்துதன்
வாலிருந் தைவத வடிவு காட்டினான். 7

**கா**ட்டலுஞ் சதமகன் கடவு ளேயெமை
வாட்டொரு சூரனை மடித்துக் காவெனக்
கேட்டவ னஞ்சன்மின் கிருபை செய்துமென்
றாட்டரன் பாறபடை யரசை வாங்கினான். 8

**வா**ங்கிமற் கணத்தொடு மகிவந் தோதியும்
வீங்குமெய்க் கயமுகன் றனையும் வீட்டுபு
பாங்குடைச் சிங்கனும் பானு கோபனும்
நீங்கிடக் கண்டவர் நிருபற் கீண்டனன். 9

**கீ**ளவை பரிகொடி யாய்க்கி ளர்ந்தன
ஆளொரு வரையடைந் தருணை யான்புகழ்
வாளன கண்ணியை மணந்து விண்புரந்
தாளெயின் மான்மணந் தான்ச யம்புவே. 10

*கந்தசட்டி மாவிரத பூசையிற்* ***கந்தபுராண*** *படனஞ் செய்யவேண்டுமென்னு நியதியுண்டு. அஞ்ஞான்று அதுசெய்தற் கியலாதார், இத்திருப்பத்தையே ஒருமுறை பத்தியோடும் பாடி அப்படன புண்ணியத்தைப் பெறலாம்; ஐயமின்று.*

# அட்டாட்டவிக்கிரகலீலை.

## நாற்பத்தெண்சீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

சந்திரசேகரமர்த்தநாரீ சுரஞ்
சக்கரப்பிரதானம்
தக்ஷிணாமூர்த் தமிலிங்கம் லிங்கோற்பவந்
தக்ஷயக்கியபங்கம்
சந்தியினிர்த்தனஞ்சந்ததநிர்த்தனஞ்
சண்டேசாநுக்ரகம்
சலந்தரவதமகொராஸ்திரமேகப
தம்மசுவாரூடம்
சத்யச தாசிவம்மிக்கசதாசிவந்
தகுலகுளேசுவரம்
சகஜசுகாசனங்கூர்மசங்காரமச்
சாரிவராஹாரி
சற்குருமூர்த்தமுமேசமுமாபதி
ஜயபுஜங்கத்ராசம்
சார்த்தூலஹரிபைரவங்கலியாணசுந்
தரம்வடுகங்கிராதம்

சுந்தரவிருஷபவூர் திவிஷாபஹ
ரணஞ்சுவராபக்நம்
துகளறுக்ஷேத்திரபாலகந்தொல்கரு
டாந்திகம்முகலிங்கம்
துங்ககங்கா தரங்கங்காவிஸர்ஜநஞ்
சுபசோமாஸ்கந்தம்
சூரஸிம்ஹாரி கமாரியமாந்தகஞ்
சுசி மாணவபாவம்
சுபகரபிரார் த்தனைமூர்த்தநறுந்திரி
புராந்தகஞ்சுரர்பரசும்

சுமுககங்காளமிரக்தபிக்ஷைப்பிர
தானமிருஞ்சுடரே
சுடர்கவுரீ வரப்பிரதம்மஹாபா
சுபதசௌரூபமணி
தோன்றுபுஜங்கலளிதம்ரிஷபாந்திகந்
தோமறுகஜயுத்தம்

விந்தைவிளம்புகஜாந்திகம்வீணை
தயங்குதக்ஷிணமூர்த்தம்
மேதகயோகவினோதமதாக
விளங்குதக்ஷிணமூர்த்தம்
விமலபிக்ஷாடனங்கவலையுத் தாரணம்
வேதகணம்புகழும்
விதிசிரகண்டனங்கவுரிலிலாசமந்
விதமெழிலரியர்த்தம்
வீரபத்திரந்திரிமூர் த்திமுப்பாதம
ஹாவேதாளிநடம்
வெருவறுமேகபதத்திரியுருவாய்
விளம்பறுபதுநான்கும்
விலாசவளிப்புநிமித்தமெடுத்தவொர்
மெய்ப்பொருளேதுவதுவே
விண்ணவர்மண்ணவர்கண்ணவர்யாவரும்
வீடருளாயெனவே

வந்தனைபுரியவிருந்துளனியென
வண்டமிழான்மனசான்
வாழ்த்திவணங்கெனையாளவெனிருதய
மலரிலெழுந்தருளாய்
மந்திரநாயகதந்திரநாயக
மங்களநாயகவோம்
மயதவரீ சுரபரமகுஹேசுர
வசனமனாதீத

வரதக்ருபாகரகுமரபராபர
வரைவறுஷாட்குண்ய
வஸ்துவெனற்புதசத்தியவித்தக
மரணமொடயனமிலா
வானவஞானநபோமணியேதிரு
மாலயனறியாவோர்
மாமலையின் பெயரான் குருநாதவென்
மருடெறுமாமுனியே.

*இவ்விருத்தத்தினை உள்ளுருக்கத்தோடு முப்போதும் பாடி யாடுக. ஆடாவிடினும் பாடுக. அங்ஙனஞ் செய்வார்க்கு உரோக நாசம், பாபநாசம், சத்துருநாசம், ஆயுள் விருத்தி, தைரியவிருத்தி, வீரிய விருத்தி, புத்திரவிருத்தி, புண்ணிய விருத்தி யுண்டாதலோடு சர்வார்த்த சித்தியும், முத்தியும் வாய்க்கு மென்பது வாய்மை.*

# போற்றிவிண்ணப்பம்.

*அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.*

**ஐ**யனே யரசே போற்றி யருமறைப் பொருளே போற்றி
துய்யனே துணையே போற்றி தூமணித் திரளே போற்றி
மெய்யருள் விளைவே போற்றி வெற்றிவே லேந்து பூவற்
கையனே போற்றி யெங்கள் கடவுளே போற்றி போற்றி. 1

**போ**ற்றுவிண் ணவர்கோன் போற்றி புரிதவத் தொண்டர்க் கின்பம்
ஆற்றுநல் லழகன் போற்றி யாடுமம் பரியோன் போற்றி
நீற்றினைப் புனைந்த மேனி நிலவருட் குன்றம் போற்றி
சீற்றமெம் மேற்கொ ளாவோர் சிவசுப்பிர மணியம் போற்றி. 2

**ம**ணியணி மால்வி ரிஞ்சன் மற்றுள கணங்கள் யாவும்
பணியநின் றவனே போற்றி பரமனே போற்றி யன்பர்
அணியடி யலரே போற்றி யாக்கிநன் களித்து மாய்க்குங்
குணமுடை யத்தா போற்றி குமரவேள் போற்றி போற்றி. 3

உடலோடுயிர் பகையாயிடி னுயிர்வாழ்வது முளதோ
அடர்கூழொடு மதிலேமுர ணானாலுரு வாமோ
அடியேனொடு நீதான்முனி வானாலுயர் வேனோ
மடல்மாமலர் முடியோயருள் வலியாரயி லரசே. 8

நானாரென வறியாமட நாயேனடு வுணர்வின்
கோனாமுனை யறியாற்றலு முளனோகுரு வருளால்
நானாரென வறியும்படி நலியாவருள் புரியாய்
வானோரரஞர் தீர்த்தாணெடு வலியாரயி லரசே. 9

இருளாமல மறுத்தாயிடை யெனைநீதர வருளின்
குருவாய்வர வேண்டுங்களி கூர்ந்தேகொள வேண்டும்
அருளாலுயர் தண்ணந்தமி ழனுபூதி யறைந்தோன்
மருமாமலர் கொடுபூசைசெய் வலியாரயி லரசே. 10

## தௌத்தியம்.

*பண்-கொல்லி.*

அரஹர மந்திர வமல நிரந்தர
சரவண சம்பிரம சங்கர புத்திர
சுரபதி பூம சுகோதய போதக
பரிபுர சததள பாத நமஸ்தே. 1

ஆதி யனாதியு மான வரோதய
சோதி நிலாவு சடானன சுபகர
வேதக சமரச விண்டலர் பண்டித
பாதக கண்டன பாத நமஸ்தே. 2

இந்துள லம்பக விங்கித மங்கல
சுந்தரரூப துவாதச கரதல
சந்திர சேகர தடதா கிடதடப்
பந்திகொ ணிர்த்தன பாத நமஸ்தே. 3

ஈசுர நந்தன வீசுர புங்கவ
தேசுறு குண்டல சித்திர பந்தன
ஆசறு சஸ்திர ஹஸ்த சரோருக
பாச விமோசன பாத நமஸ்தே. 4

உச்சித மஞ்ஞையி லூரதி மோகன
நிச்சய வுத்தர நித்ய மனோலய
சற்சனர் மித்திர சத்துரு கண்டன
பச்சையம் புஷ்கர பாத நமஸ்தே. 5

ஊர்த்துவ நாடகர்க் கோதிய தேசிக
ஆர்த்த தயித்திய ரடறெறு காதக
கூர்த்திகை வீரிய குக்குட கேதன
பார்க்க வருங்குக பாத நமஸ்தே. 6

எண்ணறு வைபவ விந்த்ர விசேஷண
புண்ணிய வுத்தம பூரண பச்சிமக்
கண்ணில குஞ்சிவ கந்தகிரு பாசன
பண்ணவர் பூஜித பாத நமஸ்தே. 7

ஏரக நாயக வென்குரு நாயக
தாரக நாயக சண்முக நாயக
காரக நாயக கதிதரு நாயக
பாரக நாயக பாத நமஸ்தே. 8

ஐங்கர சோதர வம்பிகை காதல
மங்கள வல்லி மனோரத குஞ்சரி
இங்கித காவல விகபர சாதக
பங்கயன் மால்பணி பாத நமஸ்தே. 9

ஒகர மஹாரத வொளிர்புய வமுதர்கள்
புகழுப வீதவி பூதிகொண் முண்டக
ரகித விதூன லலாட விலோசன
பகருஹ பாவக பாத நமஸ்தே. 10

ஓமர ஹரசிவ வோஞ்சர வணபவ
ரீமர ஹரசிவ நிகழ்பரி புரபவ
ஸ்ரீமர ஹரசிவ திரள்பவ மொழிவளர்
பாமகள் புகழருட் பாத நமஸ்தே. 11

## ஆறெழுத்துண்மை.

*பண் - காந்தாரபஞ்சமம்.*

அற்புத மாகிய வருமறை மொழிபோல்
வெற்புயர் புவனம்பல் விளங்கிடு மாறு
பற்பல தேவர்கள் படர்ந்தவிண் ணுறினும்
தற்பர மாவது சரவண பவவே. 1

பத்தியு ஞானமும் பரவிடு மார்க்கம்
எத்தனை யோவகை யிருக்கினு மிகத்தில்
முத்திதந் தனுதின முழுப்பல னல்கச்
சத்திய மாவது சரவண பவவே. 2

பூசிக்கும் வானவர் புரவல னாவி
வாசிக்கு மாவடி வழிபடி னென்றும்
பாசத்தை நசித்திவண் பரப்பிரம வாழ்வைத்
தாசர்பங் காக்கிடுஞ் சரவண பவவே. 3

அருணல முள்ளவ னாதிமுன் னுள்ளான்
பொருணல முள்ளவன் பூசித வடியார்க்
கிருணில மெய்தினு மிதமுட னேயத்
தருணத்திற் காப்பது சரவண பவவே. 4

பொடிபொலி மேனியன் புரண வியோம
வடிவுடை யயிலுடை மனனடி கைகூப்
படியவர்க் கிடுக்கணிவ் வவனியிற் குறுகின்
சடிதியிற் றடுப்பது சரவண பவவே. 5

**ம**ஞ்சிகைச் செவியோன் மயிற்பரி யூர்வோன்
தஞ்சமென் றவர்க்கரு டருசம ரூரான்
செஞ்சரண் வாழ்த்துநர் திருவடி சேர்வார்
சஞ்சலந் தவிர்ப்பது சரவண பவவே. 6

**பொ**ங்கிடு புனலிலம் பூவில்வெங் கனலில்
எங்கணு முளவெளி யில்வளி பகலிற்
கங்குலி லடியவர் கருத்துநன் காகச்
சங்கடந் தீர்ப்பது சரவண பவவே. 7

**தெ**ன்றிசைக் கோன்விடு திரிவிதத் தூதர்
குன்றெனும் புயமலை குலுங்கமுக் குடுமி
வென்றிகொள் கடந்தடி வீசிவெம் பிடினும்
தன்றுணை யாவது சரவண பவவே. 8

**தே**வியுந் தேவனுந் திருவுரு வருவம்
மேவி யனாதியாய் மிளிர்தல்சண் முகமென்
றாவலுற் றுணர்பவ ரழிவுறா வண்ணஞ்
சாவினைத் தடுப்பது சரவண பவவே. 9

**இ**ந்திரன் முனிவர்க ளேத்துபொற் சரணான்
செந்திரு நகரிடஞ் சேர்ந்ததில் வாழ
அந்திருப் புகழ்பா டினவருக் கபயம்
தந்ததைத் தருவது சரவண பவவே. 10

# திருநெல்வேலிக்கோவில்.

*பண் - நட்டராகம்.*

**சீ**ருடை யாரியனே யெனைச் சேர வணைப்பவனே
ஏருடை வானவர்கள் நிதமேத்தும் பராபரனே
ஆருடை வேலவனே நெல்லை யப்பர் விமானமுறை
நாருடை யோமயனே யென்ற னாட்டத்தைப் பூர்த்திசெய்யே. 1

கச்சணி மாமுகையாள் குறக் காரிகை காவலனே
சொச்சமெய் யோகருளந் தனிற் சொந்தப்பட் டுள்ளவனே
அச்சமில் சிற்பரனே நெல்லை யப்பர் விமானமுறை
எச்சமி லெம்பரனே யென தெண்ணத்தைப் பூர்த்திசெய்யே. 2

ஏத்தி யிறைஞ்சுபவர் மிகை யேக வருள்பவனே
கோத்திர மற்றவனே குணக் கூறிணை கூறவொண்ணா
ஆத்தும நாயகனே நெல்லை யப்பர் விமானமுறை
ஊத்தையில் சேயவனே யென துள்ளத்தைப் பூர்த்திசெய்யே. 3

உம்பரைத் தொண்டு கொளுங் கனவுத்திப் பெருக்குடையாய்
எம்பெரு மானெனவே நித மேத்துநர் பங்குடையாய்
அம்பர வேதியனே நெல்லை யப்பர் விமானமுறை
செம்பர வேலுடையா யென்றன் சிந்தையைப் பூர்த்திசெய்யே.4

கங்கையுங் கொன்றையு மார் கிடைக்கண்ணுத லானவொரு
சங்கர னார்குமரா வந்தச் சங்கர னாரிறைவா
அங்கத மற்றவனே நெல்லை யப்பர் விமானமுறை
புங்கவ னேகுகனே யென்றன் புந்தியைப் பூர்த்திசெய்யே. 5

கான மலர்க்குழலி தெய்வ குஞ்சரி காவலனே
தானவர் மாபுரியைச் சல ராசியான் மூடிவிண்ணோர்
ஆனவர்க் காக்கமிட்டோய் நெல்லை யப்பர் விமானமுறை
நூனமில் வேதியனே யென்ற னோக்கத்தைப் பூர்த்திசெய்யே. 6

பத்தருட் புத்தமுதே யெங்கள் பாக்கியப் பொக்கிஷமே
சித்தெனுஞ் சத்திதனை யொரு தூண்டத்திற் சேர்த்துளனே
அத்தனே யற்புதனே நெல்லை யப்பர் விமானமுறை
நித்தனே சண்முகனே யென்ற னெஞ்சத்தைப் பூர்த்திசெய்யே. 7

பூவளங் கொண்டொழுகச் சிவ புண்ணியந் தான்றழைக்கத்
தாவற வேதினமு நல்ல தாம்பிர வன்னியெனும்
ஆவகை தான்பெருகு நெல்லை யப்பர் விமானமுறை
வீவி லயிற்கரனே யென்றன் வேண்டலைப் பூர்த்திசெய்யே. 8

சந்ததம் வந்திப்பவர் பத்திச் சாலத்திற் சிக்கிக்கொளுஞ்
செந்திரு வன்புடையா யுமை செல்வச் செழும்பொருளே
அந்தரர் நாயகனே நெல்லை யப்பர் விமானமுறை
நந்தலி லெம்பெருமா னென்றன் ஞானத்தைப் பூர்த்திசெய்யே. 9

**ச**ங்கையி லுன்புகழைத் தினஞ் சாற்றிய வெந்தைபிரான்
இங்கெனை யுய்வித்தவ ருனை யன்றி யெவருளரால்
அங்கியின் மேனியனே நெல்லை யப்பர் விமானமுறை
பங்கமி லாய்எனது வழி பாட்டினைப் பூர்த்தி செய்யே. 10

*திருநெல்வேலிச் சிவாலயத்திலுள்ள சண்முகமூர்த்தி திருக்கோவில் பூதி மங்கியிருத்தலை தேசிகர் கண்ணுற்று உளம் வருந்துநராய் அற்றைப் போதாகிய ஆடி மாதம் 28ஆம் நாள் (1895) "சீருடையாரி யனே" என்றற் றொடக்கத்து இவ்விருபதாந் திருப்பதிகம் பாடி யருளினார். இதன்கண் முதற்கட் சீருடைமை தோன்றி நிற்றலும், எனதுள்ளத்தைப் பூர்த்திசெய் என்னும் வேண்டுகோள் பெருகி நிற்றலும் காணக் கிடக்கின்றனவே. அக்கோவிலும் அடுத்த ஆண்டிற் றானே செழுமை பூத்து விளங்குதலைத் தேசிகர் கண்ணுற்று உவகை பூத்தாரென்னும் விவரம் சரித்திரத்துங் காணலாம்.*

# திருச்சிந்துபுரம்.

*பண் - நட்டராகம்.*

**கா**ர்முகி றான்பொழியு மிந்தக் காசினி மீதெனெதிர்
நார்முனி யென்னவந்தே யொரு நாட்டத்தில் வைத்ததுபோல்
ஆர்மதி யுந்தருவோ ருனை யன்றி யெவருளரே
சீர்பெற வாட்படுவார்க் கருள் சிந்து புரத்தானே. 1

**பொ**ய்கொலை குத்திரங்கள் செய்து பூரித்த புன்மையினேன்
உய்வண மாதவர்போல் வந்தவ வுண்மைசொன் னாயினமும்
ஐயவிங் கெற்கருள்வோ ருனை யன்றி யெவருளரே
தெய்வமென் றாட்படுவார்க் கருள் சிந்து புரத்தானே. 2

கொள்ளு நிலைவிளக்கிச் சிறு கோவணத் தோடிருந்தே
உள்ளென வைத்தவனே யென துள்ளத்து ளேமருவி
எள்ளிடா திங்கருள்வோ ருனை யன்றி யெவருளரே
தெள்ளிதி னாட்படுவார்க் கருள் சிந்து புரத்தானே. 3

காரண மாயையிருந் தெழு காரிய மாமுடம்பைப்
பூரண மாயளித்திங் குனைப் போற்ற விதித்தவருள்
ஆரிய வெற்கருள்வோ ருனை யன்றி யெவருளரே
சீருட னாட்படுவார்க் கருள் சிந்து புரத்தானே. 4

ஆசைகொள் பொய்யுலகப் பட ரானதை நச்சியுழல்
பாசர் வழியையொரு சற்றும் பற்ற விடாதுசெய்தோய்
ஆசையொ டெற்கருள்வோ ருனை யன்றி யெவருளரே
தேசுட னாட்படுவார்க் கருள் சிந்து புரத்தானே. 5

இந்த வுடம்பெடுத்தே யிவ ணேற்றபொல் லாங்கனைத்தும்
வந்த புலந்தெரியா தற மாய்த்தவ னேயினுமென்
அந்தர மோர்ந்தருள்வோ ருனை யன்றி யெவருளரே
சிந்தைசெய் தாட்படுவார்க் கருள் சிந்து புரத்தானே. 6

புன்மன தைப்பெரிதாப் பணிப் புன்றொழி லத்தனையும்
என்மன திற்படியா திறச் செய்தவ னேயினமும்
அன்னம னைத்தடுப்போ ருனை யன்றி யெவருளரே
தென்னுட னாட்படுவார்க் கருள் சிந்து புரத்தானே. 7

பெற்றவ ரும்மறப்பார் பிறந் தார்மக ரும்மறப்பார்
உற்றவ ளும்மறப்பா ளொரு காலமு நீமறவாய்
அற்ற மறுத்தருள்வோ ருனை யன்றி யெவருளரே
தெற்றென வாட்படுவார்க் கருள் சிந்து புரத்தானே. 8

மண்ணினும் விண்ணினுநான் கென மல்கு திசைகளினும்
அண்ணிய வுன்னடியா ருடை யன்பிலுள் ளோயெனதுள்
எண்ண மறிந்தருள்வோ ருனை யன்றி யெவருளரே
தெண்ணர லைக்குரைசா றிருச் சிந்து புரத்தானே. 9

துப்புறழ் வாய்க்குறமா னினி தோடமு வுங்குகனே
அப்பனே யின்பநுகர்ந் தனு பூதிசொன் னோன்குரவா
ஒப்புட னெற்கருள்வோ ருனை யன்றி யெவருளரே
செப்பமொ டாட்படுவார்க் கருள் சிந்து புரத்தானே. 10

## நமன்றமர்நணுகாநெறி.

*பண் - நட்டபாடை.*

ஆதித்தரெ னச்சொல்சுரர் களினீள்பகை யறுத்த
சோதிச்சுடர் வடிவேலவர் சுகுர்தத்திரு நாமம்
ஓதிப்புவி மீதேநித முவந்தாரரு ணாடிச்
சாதித்திடு வோர்பானமன் றமர்தாநணு காரே. 1

என்பார்தசை செந்நீர்நரம் பெனவேய்ந்தபொய் யாக்கை
துன்பாலழி முனமேசிவ சுதனான குகேசன்
அன்பாவதை யன்போடெண்ணி யன்பிற்படி யுமவன்
தன்கானினை வோர்பானமன் றமர்தாநணு காரே. 2

பாளைச்சுருண் மீதஞ்சிறை யளிதானளி பருக
வாளைப்பொரு தத்தாரைக ளிலகும்வன மகளார்
தோளைத்தமு வுங்காமரி லுழல்சேயிரு தூய
தாளைப்புகழ் வோர்பானமன் றமர்தாநணு காரே. 3

மரணஞ்சன னஞ்சூழ்கவன் மருளேதுமி லாவோர்
புரணந்தனை யுடையாரடை பொருளாவிக ளுள்வாழ்
கரணன்மர கதரூப கலாபச்சிகி யூர்வோன்
சரணந்தொழு வோர்பானமன் றமர்தாநணு காரே. 4

நிதம்வந்தனை புரிவோரக நிகழுங்கிரு பாளு
மதவங்கய முகனாரிள வலெனுங்கும ரேசன்
பதபங்கய வியன்மான்மிய மொழிசீரிய பாடல்
சததஞ்சொலு வோர்பானமன் றமர்தாநணு காரே. 5

**ம**னைபன்னிய ருஞ்சேயுற வோடேவிரி மண்ணில்
வினைபண்ணியு ழல்வோருளு மிளிர்வேன்முரு கோனன்
பினையுன்னடி யார்க்கேகளி பெருகும்படி தொண்டு
தனையேபுரி வோர்பானமன் றமர்தாநணு காரே. 6

**ப**லிக்கப்பரை கொண்டேமறு கூடின்னிசை பாடிப்
புலிப்பொற்புரி யரையாத்தொரு பூவெண்கிரி யுறைவோர்
வலிக்கொப்புறு குகதேவுயர் சரிதங்களை மனமே
சலிக்கப்படிப் போர்பானமன் றமர்தாநணு காரே. 7

**அ**வமாமதி பாவம்பல வயர்ந்தோர்குழு வுள்ளும்
நவமாமணி முடியும்பர்க ணாளுஞ்சலி யாமற்
சிவமேயென நினைகின்றவொர் செவ்வேளடி நேடித்
தவமேபுரி வோர்பானமன் றமர்தாநணு காரே. 8

**ம**தங்கட்டிய மருப்புக்கரி யைப்பாய்முகை மகடூஉ
நிதம்பப்புழை வீழாவொரு நெறிநின்றறு முகவேள்
பதஞ்சிக்கிட விலையேயென பணுவோமென விழிநீர்
ததும்பத்திரி வோர்பானமன் றமர்தாநணு காரே. 9

**தே**ர்ந்தோர்துதி செய்யுந்திருப் புகழ்சொன்னவ னெஞ்சம்
ஓர்ந்தேயருள் புரிந்தோனெனு முமையாள்சுத னடிக்கண்
வார்ந்தோடுநன் மதுநச்சிடு வரிபோலவ னன்பிற்
சார்ந்தேயிருப் போர்பானமன் றமர்தாநணு காரே. 10

## வழிபாட்டின்மாட்சி.

*பண் - இந்தளம்.*

**கூ**ரியுரி போர்த்தவர் காதல னாய
விரிகதிர் வேலுடை யாயுனை வேண்டித்
திரிபவ ருலகினிற் றீதடை வாரோ
பரிவுடை யினருட பாடடை யாதே. 1

**வா**னத்துய் வோரிறை யோனெனு மாண்பு
ஞானப்பொன் வேலுடை யாயுனை நாடி
யேனிற்கு மேசில ரிழிவடை வாரோ
தேனிற்கு மேலுயர் சேணடை யாதே. 2

**பொ**ய்யுரை சீத்தருள் புரிகுரு நாதா
தொய்யலில் வேலுடை யாயுனைத் தொழுவோர்
வையமு ளேகடி மடியடை வாரோ
மெய்யதி மேதக வீறடை யாதே. 3

**செ**றிசிறு கிங்கிணி சேர்சர ணாதூய்
அறிவுடை வேலுடை யாயுனை வாழ்த்தும்
பொறியுடை யோர்மறு புதையடை வாரோ
வறிதறு வாழ்வினை யேயடை யாதே. 4

**நு**ண்ணிடைச் சசிமகள் பதியெனு நுதலார்
கண்ணுடை வேலுடை யாயுனைக் கருதி
மண்ணிடைத் திரிபவர் மருளடை வாரோ
விண்ணிடை நிறுவொரு வீடடை யாதே. 5

**ச**கலச ராசர தாரக தேவா
இகலயில் வேலுடை யாயுனை யெண்ணிப்
புகலிலை யென்பவர் புலவடை வாரோ
நிகரறு பூரண நிலையடை யாதே. 6

**அ**றைமறை யாறங்க நெறியின ரேத்தும்
பொறையுடை வேலுடை யாயுனைப் போற்றும்
குறையில் ரோகையில் குறைவடை வாரோ
நிறைவெனு மின்புறை நிலையடை யாதே. 7

**து**விதமி லாதவத் துவிதமெய்ஞ் ஞானச்
சவியுடை வேலுடை யாயுனைத் தாழ்ந்து
கவிகுயில் வோர்கலுழ் கறையடை வாரோ
விவிதமி லாவிப வம்மடை யாதே. 3

தேட்டமொ டன்றறு வருக்குயர் தேற்ற
நீட்டிய வேலுடை யாயுனை நீங்கா
நாட்டமிக் குடையவர் நலிவடை வாரோ
ஆட்டுமுன் னோடிரண் டறவடை யாதே. 9

திருப்புகழ் நாவலன் றிருப்புக ழணிக்கு
விருப்புடை வேலுடை யாயுனை மறவாக்
கருத்துளர் பிறிதொரு கருப்புகு வாரோ
உருக்கிய வுடம்புட னுனையடை யாதே. 10

## துயரறுக்கு மார்க்க விளக்கம்.

*பண் - நட்டராகம்.*

மணிம தாணி மார்பினர் மாசில் பரசுப் படையினர்
திணிம யூர வாகனர் சீத மேய நீபவீ
அணிவி சாகர் சேவடி யடைவ தேமெய் வீடெனாப்
பணிவி வேகர் தூவடி பரவச் சூர்கள் பாறுமே. 1

நாத கீதப் பிரியர்மெய்ஞ் ஞான யோகத் திருவினர்
பூத நாதர் பொருவிலாப் பூதி திமிரு மேனியர்
வேத நீதர் வேய்ங்குழ லூது வாயர் வேலவர்
பாத நாடு வோரடி பரவச் சூர்கள் பாறுமே. 2

எண்ணு வார்க ணெஞ்சுணர்ந் தருளு மீடி லிருதய
அண்ண லேயென் றேத்துநர்க் கைய ராகு முருகவேள்
கண்ணி னாட்ட நிமிரவே கருதி ஞான யோகமே
பண்ணு வோர்கள் பதமலர் பரவச் சூர்கள் பாறுமே. 3

ஈச னேசு ரேசனே யெனுநர்க் கின்பு பொழியவே
மூசு கருணை மேகமா முதல னாதி முருகவேள்
தாச ராயிவ் வுலகிலே சார்பி லாது திரிதரு
பாச நாசர் பதமலர் பரவச் சூர்கள் பாறுமே. 4

சீல யோகர் செல்வமாஞ் செல்வம் யாவு நல்கருட்
கோல மேநன் மேனியாக் கொண்டு லாவு குமரவேள்
காலை நம்பி விடயவெங் கனலி யாற்றின் மேன்மயிர்ப்
பால ஞான நிற்குநர் பரவச் சூர்கள் பாறுமே. 5

தீங்கு றாத சேடுடைச் செந்தி னாத ரருள்கொடு
வீங்க லின்றி வீங்கிடும் விமல யோக நிலையிலே
ஓங்கு சின்முத் திரையினா லொன்றி ரண்டெ னாதநல்
பாங்கி னோர்தம் பதமலர் பரவச் சூர்கள் பாறுமே. 6

அந்த மாதி நடுவிலா வமல ஞான மயசிவா
நந்த சரவ ணபவவே ணாம மந்த்ர மோதியே
கந்த மாதி யைந்தையுங் கடியும் வன்மை யொடுநெடும்
பந்த நீத்து ளோர்பதம் பரவச் சூர்கள் பாறுமே. 7

சடில நாத ராஞ்சிவ சம்பு நன்கு நவின்றவா
நெடிய வேலி னிறைவரை நிமல னாநி னைந்துமா
கொடிய நெஞ்சை யொருமுகங் கூட்டி நினைவு கூர்ந்துகோட்
படிற கன்று ளோர்பதம் பரவச் சூர்கள் பாறுமே. 8

சுகுர்த ஞான தேசிகா சூர நாச காமகா
சிகியி ராச வோஞ்சிவ சிவசி வசிவ சிவசிவோம்
குககு கருக ஹரஹர குமர குருப ரவெனவே
பகரு மன்பர் பதமலர் பரவச் சூர்கள் பாறுமே. 9

தீஞ்சொ லருண கிரிசதா சிந்தை செய்ச டானனா
ஓஞ்ச ரவண பவநம வோஞ்சி வாய நமகுகா
ஓஞ்ச ரவண குருபரா வோந மோந மவெனுமின்
பாஞ்சு சீலர் பதமலர் பரவச் சூர்கள் பாறுமே. 10

# பிரப்பன் வலசை.

*பண் - சாதாரி.*

**பூ**மக ளியங்குலகி னல்லதமிழ் நாவலர் புலம்பு கவிதைத்
தாமமணி நங்கடவு ளென்னுமுரு கையரடி தன்னை யெணியே
நாமுன மிருந்தவள மேகிளர் நயப்புள பிரப்பன் வலசை
ஆமிதனை நண்ணுபவ ரன்புடைய ராவர்பழி யஞ்சு மனதே. 1

**தொ**ண்டரக நின்றுநிமிர் கின்றவரு ளின்பரிவு சொந்த முறவென்
றண்டரலர் கொண்டுபுசி தம்புரியு மாதிமுரு கைய ரருணாங்
கொண்டுசில வைகல்வதி தந்தவிட மென்றுயர்வு கூறு மடர்பூ
வண்டறை பிரப்பன்வல சைப்பதி யிதாகுமெனுண் மல்கு மனதே. 2

**மெ**ய்யடிக ணெஞ்சக மிருந்துவிளை யாடியருண் மெய்ய ரெனுநம்
ஐயடிக ளாமுருக வேளடி நினைந்துதனி யாகி யளிநீர்
பெய்யிருகண் மூடியுளி ருந்துணர்வு கொண்டவொர் பிரப்பன் வலசைச்
செய்யபதி யீதறிதி மெய்யறிவை நாடிடு திறத்த மனதே. 3

**சீ**தமதி யைச்சடையில் வைத்துமலர் வாளியுட றீய விழிசெய்
ஆதியிறை யாயகுரு சாமியெனு நம்பரனை யன்று கருதி
ஓதுமொழி விட்டக மொடுங்குநிலை கண்டவிட மென்று குயிலுங்
கோதறு பிரப்பன்வல சைப்பதி யிதாமுறுதி கொண்ட மனதே. 4

**த**ஞ்சமென நிற்பவர்க ளஞ்சன்மி னெனச்சொலுரை தந்த ருள்புரி
நஞ்சிவ பிரானெனு மயூரமுரு கையரடி நண்ணி யுழலும்
நெஞ்சினை யொடுக்கியிர வும்பகலு நின்றவன முள்ள வளமே
விஞ்சிய பிரப்பன்வல சைப்பதி யிதாமடமை விட்ட மனதே. 5

**அ**ங்குலிக மம்பவள மென்பன வணங்கதர முங்க ருமைசால்
கங்குலினும் விஞ்சுகுழ லுந்திகழ்தெய் வானைபொரு கான வர்சுதை
தங்களொரு கொண்கனெனு நங்கடவு ணன்னினைவு தந்த தகைமை
இங்கென விளம்பிடு பிரப்பன்வல சைக்களரி யீதென் மனதே. 6

**உ**ள்ளபடி யுனனுபவ ருள்ளபடி யுய்யவென வுன்னு பெரிய
வள்ளன்முரு கையாநடு நிற்குநிலை யைச்சொலி மறைந்த விடமும்
வெள்ளைகிளா புட்டுயி லெழுப்புகடல் வெள்ளலைகள் வீசு வளமும்
உள்ளவொர் பிரப்பன்வல சைபதி யிதேயுலகை யுந்து மனதே. 7

**மி**த்தைபடு வாழ்வினை விடுத்துநிஜ வாழ்வினில் விளங்க நமையே
சுத்தமுறு கோவண முடன்றிரிய விட்டவொர் சுரேச ரடிசேர்
பத்தருயர் பூசனை புரிந்துவதி பண்புறு பிரப்பன் வலசை
இத்தலம தாமறிதி வைத்தநிலை நிற்குமென தேசின் மனதே. 8

**து**ன்றுமறு பொன்மவுலி யெண்டிசையு மின்னவதி சுந்த ரமலி
பொன்றொடையல் கிம்புரி வயங்குமெழின் மொய்ம்புடைய பூரண ரருள்
ஒன்றைநனி யுன்னியுளொ டுங்குணர்வு கண்டவொர் பிரப்பன் வலசை
சென்றவ ரிருந்தவரு மன்புடைய ராவரறி தெய்வ மனதே 9

**நா**டரிய தெய்வமென வேமறைசொ லாறுமுக னஞ்சி வனெனாப்
பாடல்பல பாடியவொர் சோணகிரி கண்டவிரு பத்ம வடியைக்
கூடவென நாமினிது கொண்டநடை கட்குதவி செய்த சுகுர்தர்
பீடணவி வாழிது பிரப்பன்வல சைப்பதி பிடித்த மனதே. 10.

# திருத்தேவை.

*திருவிராகம். பண் - கௌசிகம்.*

**கா**ர்கொள்வான நீர்கொள்வேலை கானலாரந் தெள்ளிடு
நீர்கொளோதம் வீசநாளு நீலஞால மெக்கணும்
நார்கொளன்பர் வந்துவந்து நன்குபோற்ற வுள்ளமாச்
சீர்கொணல்ல தேவைவேளென் சிந்தையைக்கொள்கள்வனே. 1

**தே**ர்ந்தகல்வி யாளருஞ்சி வாகமங்கொள் செல்வருங்
கூர்ந்தபுந்தி யோருமுண்மை கூறும்வேத நாதமே
ஓர்ந்தபோர்க ளும்பொன்வாகை யோருமீட்ட மீட்டமாச்
சேர்ந்துபோற்று தேவைவேளென் சிந்தையைக்கொள் கள்வனே. 2

**சை**வமாவ ணோக்கநல்கு தாழ்வின்ஞான மாம்பழம்
கையிலேற்ற ருந்தலேக ளங்கநீத்த வின்பமென்
றையம்வென்ற ணைந்துய்வோர்க ளாவலோ டிறைஞ்சுநல்
தெய்வமான தேவைவேளென் சிந்தையைக்கொள் கள்வனே. 3

**தீ**ம்பழங்கை வாங்கிநன்கு தின்னும்வேலை யின்பமும்
தீம்பழந்தி னாதபோதஃ தின்மையுந்தி ளைத்தல்போல்
மேம்படுஞ்சி வானுபோக மென்றுதேர்வி வேகிகாண்
தேம்பிறங்கு தேவைவேளென் சிந்தையைக்கொள் கள்வனே. 4

**ஆ**திமுன்ன னாதியாம னாதியெங்கு முள்ளதென்
றேதநீத்த நெஞ்சிலேயி ருப்பதுண்மை யாகுமேற்
பாதகங்கள் செய்வதேது பந்தமேதென் போரவாம்
தீதிலாத தேவைவேளென் சிந்தையைக்கொள் கள்வனே. 5

**து**ன்புவந்த போதெம்மாதி சோதிசாமி யென்பதும்
துன்புதீர்ந்த போதுகாசு சோறுதெய்வ மென்பதும்
அன்பிலாவு லோகர் கொள்கை யன்புளோர்வி டாரவர்
தென்பராவு தேவைவேளென் சிந்தையைக்கொள் கள்வனே. 6

**ப**ண்ணுமீச பூசைகண்டு பாரிமைந்தர் மெச்சவென்
றெண்ணல்வீணர் செய்கையந்த வீசனந்த ரந்தெரிந்
தெண்ணிலாத யாணர்நல்கு மீசனென்ற தைச்செயுந்
திண்ணரேத்து தேவைவேளென் சிந்தையைக்கொள் கள்வனே. 7

**அ**சபைமந்தி ரக்குருத்த றிந்தனார தஞ்செபித்
துசிதனோடு கூடுமோன வுண்மைகண்டு கொண்டவர்
விசனமுசு பூவும்வீவு மேவிடாரன் னோர்களைத்
திசையுமேத்து தேவைவேளென் சிந்தையைக்கொள் கள்வனே. 8

**ஒ**த்தபூமி மேலுறங்க லேசன்மார்க்க யோகமாம்
முத்தர்சொற்ற நூலெலாமவ் வாறெனாவுண முன்னுவோர்
இத்தலத்து வாஞ்சைநீத்தி ருக்கவேய வர்க்கொரு
சித்தநல்கு தேவைவேளென் சிந்தையைக்கொள் கள்வனே. 9

**க**ல்வியம்ப ரப்பினெல்லை காண்கினும்விண் வேந்தெனச்
சொல்விளங்கி னுந்தனுண்மை காணொணாது சோதியீ
நல்விவேக மஃதைநல்கு மென்றுசூழ்பு கழ்க்கவிச்
செல்வனேத்து தேவைவேளென் சிந்தையைக்கொள் கள்வனே. 10

55

# திருவான்மியூர்.

தான தான தான தான. தான தான தானனா.

**சீ**ரு லாவு நீடு மாட வீதி யாதி தேவர்வாழ்
ஏரு லாவும் வேத பீட மேய்வி லாச வான்மியூர்
நாரு லாவு ஞான வேலி னாத னாத பாதமே
பாரு லாவு ஞான நூலர் பாடும் வீடு மாகுமே. 1

**கோ**ட றாத சோலை தாழை கூடு நீழ னாறுநீர்
ஏட றாத வாரி சாதி யேய்த டாக வான்மியூர்
மாட றாத மாம யூர மூரு மாதி பாதமே
பாட றாத ஞான நூலர் பாடும் வீடு மாகுமே. 2

**தே**ச றாத மீனு லாவு சீத வாரி நாளுநீர்
வீச லார்வி லாச வூர்வி வேகர் வாழும் வான்மியூர்
வாச வேலி னான்வி பூதி மாண றாத பாதமே
பாச நூறு ஞான நூலர் பாடும் வீடு மாகுமே. 3

**கூ**டு நாரை மீனை வாரு கோலம் வான்மண் மேடுவால்
நீடு ஞாளி பூனை சேன மோர்நி லாவும் வான்மியூர்
நாடு வேல னாம யூர நாத னாத பாதமே
பாடு மோகை ஞான நூலர் பாடும் வீடு மாகுமே. 4

**பூ**வு லாம்வி ணாடு மேரு பூத மேகி னாலுமே
ஓவு றாதெ நாளு மாத ரோதி சாரும் வான்மியூர்
மேவு நீன்ம யூர மூரும் வேல னாத பாதமே
பாவு தார ஞான நூலர் பாடும் வீடு மாகுமே. 5

**நா**வல் வாழை தாளி பூக நாளி கேர மேயவூர்
தாவ ணார வாவி வாழ்ச காய பூதி வான்மியூர்ப்
பூவன் மேனி வேல னீத போத னாத பாதமே
பாவ னாவர் ஞான நூலர் பாடும் வீடு மாகுமே. 6

**பூ**ணி கோக டாமை யாடு பூழி மூச வேகுமூர்
ஏணி லாவு வேத கீத வோர்கு லாவும் வான்மியூர்
வாணி லாவு ஞான வேலன் வாச நாத பாதமே
பாணி மேய ஞான நூலர் பாடும் வீடு மாகுமே. 7

பேழு ணாவெ னாமை யூக மேபல் காய்கள் பீறலாற்
கூழு லாய சூழன் மேவு கோல நீடும் வான்மியூர்
வாழு மாம யூர மூரு மாக வாதி பாதமே
பாழு றாத ஞான நூலர் பாடும் வீடு மாகுமே. 8

பாலி றாந லால நீள்ப லாவி ளாப ராய்களோர்
பாலி றாம தூக மாவொர் பால ளாவும் வான்மியூர்ப்
பாலின் மேனி நாதர் சேய்கு கேச னாத பாதமே
பாலி னேய மானு நூலர் பாடும் வீடு மாகுமே. 9

கூன னாகு மீன மூரல் கூடு பானல் வான்மியூர்
ஞான வேல னார லோதி நாம னாடு தேவனாம்
மான வான்ம யூர மேறு மாக சோதி பாதமே
பான றாவி னோதி நூலர் பாடும் வீடு மாகுமே. 10

## தெய்வம்.

*அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.*

பூவெலாம் போற்றுந் தெய்வம் பொதுநடு நடிக்குந் தெய்வந்
தேவெலா மேத்துந் தெய்வஞ் சிவப்பொரு ளெனுமா தெய்வந்
தாவெலாந் தபுக்குந் தெய்வந் தனிச்சுக மிசைக்குந் தெய்வ
மாவதைப் பழிச்சி மாயா வயனமாய் வகற்று வேனே. 1

இதரமொன் றில்லாத் தெய்வ மியாதினுங் கிளரோர் தெய்வம்
விதரணக் கடலாந் தெய்வம் விகிர்தம தணவாத் தெய்வம்
உதாரமுற் றுதியாத் தெய்வ மொளிவெளி மயமாந் தெய்வ
மதனையே பழிச்சி மாயா வயனமாய் வகற்று வேனே. 2

மோனமா டுடையார் தெய்வ மோகத்தார் தெரியாத் தெய்வம்
வானநா டுடையார் தெய்வ மனதுரைக் கடங்காத் தெய்வம்
ஞானமே வடிவாந் தெய்வ நடுவெளிக் குகனாந் தெய்வ
மானதைப் பழிச்சி மாயா வயனமாய் வகற்று வேனே. 3

**நா**குழூப் பணையாத் தெய்வ நசையுநர்ப் புரந்தா டெய்வம்
பாகினு மினிதாந் தெய்வம் பரசுமெ ணாசைத் தெய்வம்
யோகிகள் குரங்குந் தெய்வம் யுகளமன் றொன்றாந் தெய்வ
மாகுமோர் குகனை யேத்தி யயனமாய் வகற்று வேனே. 4

**ஆ**மய மடையாத் தெய்வ மறிவினுக் கறிவாந் தெய்வம்
ஒமுறைப் பொருளாந் தெய்வ முயிரினுக் குயிராந் தெய்வம்
பாமரஞ் செகுக்குந் தெய்வம் பவக்கடல் கடத்துந் தெய்வ
மாமொரு குகனை யேத்தி யயனமாய் வகற்று வேனே. 5

**ந**னவினர் தெரியாத் தெய்வ நாதநா தாந்த தெய்வங்
கனவினர் காணாத் தெய்வங் கருணிலைக் கெட்டாத் தெய்வஞ்
சினமெது மணவாத் தெய்வஞ் சிவக்கொழுந் தாமா தெய்வம்
எனுமொரு பொருளைப் போற்றி யிகலிட ரகற்று வேனே. 6

**அ**ன்பருக் கருளுந் தெய்வ மளப்பிலா வறிவு தெய்வந்
தன்பணை யறியாத் தெய்வஞ் சகசசித் தாந்த தெய்வம்
இன்பரு ளியற்கைத் தெய்வ மெனைக்கொளும் விழுப்பத் தெய்வம்
என்பதை யிறைஞ்சி யேத்தி யிகலிட ரகற்று வேனே. 7

**அ**ன்னையா யணைத்தா டெய்வ மளிவலைப் படுமோர் தெய்வங்
கன்னலி னினிக்குந் தெய்வங் கருத்தினைக் கவருந் தெய்வம்
என்னுளே யிருக்குந் தெய்வ மியாதினும் வலதாந் தெய்வந்
தன்னையே யிறைஞ்சி யேத்திச் சனனமாய் வகற்று வேனே. 8

**எ**ன்றுமோர் படித்தாந் தெய்வ மிரண்டினு மேலாந் தெய்வம்
மன்றிலே நடிக்குந் தெய்வம் வரதசா கரமா தெய்வம்
நன்றினு நலஞ்சா றெய்வ நகுமொளிப் பிழம்பாந் தெய்வம்
ஒன்றையே சூழ்ந்து கண்டென் னுறுகட்சூ ரகற்று வேனே. 9

**மா**தவர் மகத்தாந் தெய்வ மறைமுடி வுரைத்தா டெய்வம்
ஆதர வாமா தெய்வ மாபத்துக் குதவோர் தெய்வந்
தீதெலாஞ் சீக்குந் தெய்வந் திருப்புகழ் தெரித்தான் றெய்வம்
யாததை யிறைஞ்சி யேத்தி யாப்பளு ரகற்று வேனே. 10

# குந்துகால்.

*பன்னிருசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.*

*தந்தனன தந்தனன தந்தனன தந்தனன*
*தந்தனன தந்ததான.*

**அ**ம்புதநி றைந்துவிரி வெண்டிரையு லம்புவிழு
மம்பெருகு குந்துகாலில்
அந்தணர்வி ரும்புமலர் தந்திடும ரம்பலவ
டர்ந்திடவ ளம்பொயாத
பம்பரமு றழ்ந்தவிர்கு ரும்பைகட ருஞ்சிறு
பசுந்தழைசெ றிந்தகேளி
பம்பிநிழ றந்திடவ மைந்ததளி யின்கணை
படுஞ்சடைநி லந்துழாவச்
செம்புநிற வம்பரம ணிந்துகர மொன்றிலொரு
தெண்டதுவி ளங்கவாசச்
செங்கழலி லொண்குறடி லங்கவளி யன்பர்க
டினந்தினமி றைஞ்சிவாழச்
சம்பரமமு டன்றிகழ ருந்தவனி ரும்பரம
சங்கரிப யந்தசூர
சண்டன்முரு கன்குமர னென்றுதொழு கின்றவர்கள்
சஞ்சலம கன்றுபோகும். 1

*தன்னத்த தத்ததன தன்னத்த தத்ததன*
*தன்னத்த தந்ததான*

**க**ம்மற்சி மிக்கிமிலை மென்மெய்ப்ப ரத்தையர்கள்
கண்மைக்க கன்றுமோக
கன்மப்ப வக்கவையை யுண்மைப்ப தத்திறைமை
கண்ணிச்சி றந்தவீர
அம்மைக்க டுத்தலையி னுன்னித்த றிக்குமுர
மண்ணிக்க டிந்தறாத
அந்நிறக மெய்ப்பரம நன்மைபப யிர்ச்செயுந

லன்மக்கள் வந்துசேரும்
செம்மைச்சி வப்பிதழி மென்முட் கடுக்கைபுனை
தென்மொய்த்த குந்துகாலில்
சின்முத்தி ரைக்கரமு டன்மத்த கச்சடைநி
லன்முட்ட நின்றதேவை
இம்மைக்க ணுற்றிறுதி யின்முற்ற ளிக்குமிறை
யெம்மைக்கொ ளந்தகாரி
யின்மைத்து னிக்குமுரு கென்னத்து திப்பர்துய
ரெண்ணிப்ப றந்துபோகும். 2

*தனதனன தானதன தனதனன தானதன*
*தனதனன தானதனனா*

**அ**மரர்களை யேவல்கொள வதிவலிமை சானிருத
ரறவொர்கணை யேவும்விறலோன்
அனலியின மீளிதவ வியன்மருவி ராகவன
தணையெனுமொர் சேதுவிடையே
விமலவிரை மாமலர்க ளவிழுமடர் காநிறையும்
விரதர்குவி காலினரிதீர்
விசதமலி நீறுருவ முழுதுநனி தோயவெழில்
விளைவிரத வேடமொடுவாழ்
சுமவதன மாமுனியை யரிமருக வேன்முருக
சுரர்நரர்கண் மாதவர்கடாந்
தொழமிளிரு நீலஞும லியிலிவரு மீசவறு
சுடருமொரு சோதிவடிவாக்
குமரகுரு தாசனிதம் வழிபடுசு ரேசசிவ
குருபரசு வாமியெனவே
குணமொடுச தாநணுகி யடிபரவு மானுடர்கள்
குறைகடுகி யோடியிடுமே. 3

*தனதாந்த தந்தனா தனதாந்த தந்தனா*
*தனதாந்த தந்ததான*

முடிபூண்ட மண்டலீ கருமாண்டொ மும்பருன்
முடைமாந்து கின்றபேயின்
முகையாங்க ணங்களோ டருண்மாந்த ரும்பையார்
முனியாண்டி யும்பனாளும்
அடியாம்ப தங்களே தொழவூங்க லர்ந்தபூ
வணிவேய்ந்தி லங்குவேணி
யதுதான்று லங்கவே யணிசான்ற செங்கைமீ
தடல்சேர்ந்த தண்டமோடு
வடிவேய்ந்த வண்டுபா டடர்பூங்க டஞ்சதா
வளர்பாம்ப னென்றதீவுள்
மடனீண்ட கந்தகே தகையீந்து சம்புமா
மணலோங்கு குந்துகாலிற்
குடியாண்ட மர்ந்ததே வனையாம்ப லந்தணார்
குழைநான்ற கொன்றைசூடுங்
குழகார்ந்த வொண்கணாள் பொருள்சேந்த னென்றுளே
கொளுமாண்பர் துன்புபோகும். 4

உப்பேறு சிந்துத்தி ரைத்தூவல் விஞ்சிப்பொ
னொப்பாய்ம லிந்தெங்குமா
ஒப்பேறு மண்டிட்டு றச்சேத ரங்கிற்க
ணுட்காவி ருங்குந்துகால்
எப்போது நன்குற்றி டக்காவல் கொண்டத்த
வெஃகோடி யங்கும்பிரான்
எட்டேறு பந்தக்கு முப்பாற வன்பர்க்கு
ளெக்கால முந்தங்குவோன்
அப்பாவு சந்தத்தி லிப்பாவி ளம்பிக்கொ
ளத்தாவெ னுங்கந்தவேள்
அஃகாத வின்பத்த ருட்டேவ னென்றுட்கொ
ளச்சோடி றைஞ்சன்புளோர்

தப்பாது துனபற்றி மிழ்ப்பாவி னஞ்சொற்ற
தக்கோனு ரங்கண்டரோ
சற்போத சம்பத்து மெய்ப்போக மும்பெற்றார்
சத்தாவ ரிங்கங்குமே. 5

# பெருவேண்டுகோள்.

கண்ணாயிர முடையான்முளை கனவிற்சர ணார்கண்
எண்ணாயிர முடையூர்தியி ருந்தேசிறை மீட்பேன்
உண்ணாய்துய ரென்றோதிய வுடையாயொளிர் பூவல்
வண்ணாவயின் மன்னாவெனை மறவேலெனை மறவேல். 1

அறிவேறுசை கீசவ்விய னார்சீடன டங்கா
நெறியாலணை யைம்பாதக நெடிலைக்களை யிறைவா
பொறியாயரு ணிலையாயதி புனிதாவயின் முதல்வா
வறிதேதுமில் குமராவெனை மறவேலெனை மறவேல். 2

முருகாவயின் முருகாவென மொழியும்மொரு மாதின்
ஒருகாதல னவள்கையினை யுதிரம்பெரு கரிகால்
அருளாலது வளரும்படி யயர்தண்ணளி யாளா
மருமாலைகொண் மார்பாவெனை மறவேலெனை மறவேல். 3

வெறிவண்டிசை பாடும்பொழில் வேலூரினை யாளும்
பொறிதங்கிய புகழானலி யக்கோடனு றங்கும்
நெறிவந்தலர் வேலேவுதி நெரியும்பகை யென்ற
மறியின்சுதை தலைவாவெனை மறவேலெனை மறவேல். 4

திங்கட்சடை யவன்மங்களை திகழுஞ்சிவ கோச
மங்கைக்கும ரேசற்றொழு தான்வைகிட னெய்தி
அங்கைக்கிடு வால்வல்சிய யின்றோதிம றைந்த
மங்குற்பகை மணியேயெனை மறவேலெனை மறவேல். 5

எளியேனவி றமிழ்மாலையி யம்போர்பொழு தென்முன்
அளியாலது வென்னான்முடி யாதோவென வினவிக்
களியோடுக ரந்தாயிது காறுங்கொள லறியேன்
வளியூரொரு தேராவெனை மறவேலெனை மறவேல். 6

மாடாடுகள் பல்குந்திரு வளமேவுபி ரப்பைக்
காடாரிட மதினானடி கருதும்பொழு தெதுவும்
ஊடாடலி லாமேயொரு மொழியோதிம றைந்த
வாடாமுக முனியேயெனை மறவேலெனை மறவேல். 7

உரனந்திய பலவைணவ ருரனார்சிவ நெறியை
நிரல்விஞ்சிய பலநிந்தைசெய் தெற்குந்துயர் தரலைத்
திரன்விஞ்சிய வதிகாரிமு னொழியும்படி செய்தாய்
வரமஞ்சிகை முருகாவெனை மறவேலெனை மறவேல். 8

பரிவாளர்க ளங்கோதொரு பஞ்சாமிர்த வண்ணம்
இரியாவென துளநச்சினி தாமென்றொரு கிழமைப்
பெரியாண்முனம் வந்தோதிய செந்திற்பெரு மானே
வரிமாமறை யிறைவாவெனை மறவேலெனை மறவேல். 9

முழுநாரொடு புகழ்பாடிய முனிவற்கரு ரேசெய்
தொழுநோயற வேசெய்தொரு சுகநல்கிய துரையே
கழுகோதியி லமர்வேலவ கருணாகர முருகா
வழுவாவழி முதல்வாவெனை மறவேலெனை மறவேல். 10

## திருக்கைலாயத் திருவிளையாடல்.

(முதற்பத்து)

கலிநிலைத்துறை.

அளவி லாவறி வன்சர வணத்தட மமல
நளின மீதறு குழவிக ளாய்மிளிர் ஞான்று
அளக நீள்சிவை யறுமுக னாயவிர் கென்றே
வளர்க ரங்களி னணைத்தது கண்டுள மகிழ்ந்தாள். 1

அருத்தி னாடிரு வமுதமு முண்டத ராப்பூண்
ஒருத்த னோடவ ளோடும டைந்ததொண் கயிலை
திருத்த மார்நவ வீரர்க ளிலக்கர்கள் சிதறா
அருத்தி யோடுற வாடலுங் கொண்டதம் மழவே. 2

காலி னேழ்கட லுடைத்தது விடுத்தது கடின
மாலி றாவெழு வான்வரை தகர்த்தது வைசால்
வேலி னாலிருந் திசைக்கரி யாவையும் வீரிட்
டோலி டுஞ்சிறு பந்தென வாடிய துவப்பால். 3

இன்ன வாறுபல் பெருந்திரு வாடல்க ளிழைத்த
இன்ன லேதுமில் பரம்பொரு ளென்விளை யாட்டாற்
பின்ன மாயவெல் லாமுனம் போற்பிறங் குகவென்
றுன்னி யன்னண மாக்கிய மாண்பெவ ருறுவார். 4

பின்றை மாகயி லாயம தடைந்தெழில் பிறங்கு
மன்றன் மெய்யிளம் பூரணன் வதிதரு காலை
கொன்றை சூடியை நினைந்தொரு நாரதன் குயிலு
கின்ற வேள்வியிற் றகர்பிறந் ததுமுறை கெடலால். 5

தண்டை நூபுரங் கால்களிற் றயங்குமத் தகர்தான்
கொண்ட சேவுடல் குலுக்கியெப் புவனமுங் குலுங்க
மண்டி யேவரு கிறததை யடக்கென மாண்பார்
அண்டர் மாதவர் தொழுதனர் சேயவ னடியை. 6

வீர பாகுதன் கைகளி னாலதன் மிடன்மெய்ச்
சீர றாவணம் பிடித்ததைக் கொணர்தலுஞ் சேய்மைத்
தார மேனிய னதன்மிசை யிவர்ந்துபஃ றலமும்
ஏர றாமலு லாவியென் னூர்தியிஃ தென்றான். 7

அக்க டாவுமவ் வாறமர் வடைந்தபின் னளியாற்
சொக்க றாவய னரனடி களின்மலர் தூவி
மிக்க வோகையொ டேவெளி வருகையின் மிடலார்
செக்கர் வேளடி போற்றலி லாதய றிரிந்தான். 8

அவ்வ யன்றனை யழைத்துமுற் குடிலையி னருத்தஞ்
செவ்வ னோதுதி யெனக்குகன் கூறலுஞ் சிருட்டி
எவ்வ மின்றுசெய் நானது வென்றய னியம்ப
உவ்வி புண்ணுறப் புடைத்தன னவனையவ் வொருவன. 9

சூட்டி மேலுதைத் திருந்தளை யிட்டிவற் கொடுபோய்
விட்டி டாதுகந் தாசல மிருத்துமி னெனுஞ்சூள்
இட்ட வாறுசெய் தனர்கண ரீசனுக் கவ்வோம்
கட்ட தோதின னருணையன் புகழ்தனிக் கடவுள். 10

*சிறுவர்களால் இத்திருப்பத்து, காலை மாலை பூசிக்கப்பட்டுப் பத்திபிறங்கப் பாடப்படுமாயின் அவர்கட்கு உடல்வன்மையுங் கல்வியறிவு முண்டாம்; ஐயமின்று.*

## சரவணப்பொய்கைத் திருவிளையாடல்.

*கலிவிருத்தம்.*

*அடியொன்றற்குப்பதினோரக்கரம்.*

**வா**யு செஞ்சுடர் தாங்கு மாசுடர்கள்
நாய கங்கையி னாண லோடையிலே
மேய பங்கய வீயி லாறுமுகச்
சேய னாகிய தேவர் தூவினர்பூ. 1

**செ**ங்கண் மாலுரை செய்த வாறறுமீன்
மங்கை மாரமு தூட்ட வேவருஞான்
றெங்க ணாயக மாறு சேயெனவாய்
அங்கை யாமலர் சார்ந்த வோரமையம். 2

**சீ**ர்கொள் சேய்விளை யாடல் செய்திடவென்
றோர்கொள் சிந்தையி லெண்ணி யேபலவாம்
பேர்கொள் போதொரு பிள்ளை பள்ளிகொளல்
நேர்கொள் யோகதி லேநி லாவியதால். 3

**ஒ**ன்ற டிக்கடி தான கைத்ததுலாய்
ஒன்று கண்மழை யோட விம்மியதால்
ஒன்று பேரொலி யோங்க வேகதறிற்
றொன்று நன்னகை யோடி ரங்கியதால். 4

**ஒ**ன்று கால்விர லேசு வைத்ததுலா
வொன்று கையல ரொன்ற வைத்ததுவாய்
ஒன்ற ராவென வூர்ந்த தேநொடியுள்
ஒன்று பூமித வழ்ந்த தோகையொடே. 5

**மூ**ன்றி ரண்டடி முந்த வேகியதொன்
றூன்று சேவடி சேப்ப வோடியதொன்
றேன்ற வாநனி யேகி யொல்கியதொன்
றான்ற லார்நில மொன்ற டைந்ததரோ. 6

**தா**ய்க ரம்பிடி சார வேகியதொன்
றோய்வி லாதெழல் வீழ லாடியதொன்
றேய்ந டாவலை யேயு ஞற்றியதொன்
றாய்வி யப்புற வொன்ற சைந்ததரோ. 7

தாவு தேரையி னொன்று தத்தியதால்
மாவ லேழக மல்ல ரென்னவிரண்
டோவு றாவெழி னெற்றி முட்டியுலாய்த்
தாவில் சண்டைகள் செய்த சால்புடனே. 8

**சா**ல்பு கேண்மினி ரண்டு தாள்புயம்வெந்
கோல்கொள் சங்கமு ழந்து கோள்விரல்கை
வால்கொண் மத்தக மார்பு கண்டமுமாம்
வேல்க ளானனி தாக்கி வீறியவே. 9

**அ**ந்த ரம்பல தாவி யாடிநிலன்
வந்தெ லாநனி மண்டி நின்றுநடந்
தந்த வாறுமி சைக்க டங்கிடுமோ
சந்த னோகைய வாவு தன்மையரே. 10

*இத்திருப்பத்து, காலை மாலை பூசிக்கப்பட்டுப் பத்தி பிறங்கப் பாடப்படுமாயிற் குழந்தைகட்குற்ற பாலாரிட்ட தோடங்கணீங்கும்; சுகமுண்டாம். தாய் தந்தையருள் யாவரேனும், மற்றையருள் எவரேனும் பாடலாம்; ஐயமின்று.*

# வேற்குழவி வேட்கை.

## கலிநிலைத்துறை. (இசை)

பதினே ழொன்றும்விழை செய்ய பாத மோலிடநன்
மதிபோன் மாமைமுக மண்ட லம்ப குக்கநகுங்
கதியே வேற்குழவீ நின்னைக் காத லாற்றமுவ
நிதியே வாராயோ கைக ணீளு கின்றனவே. 1

சீவி முடித்தசிகை செம்பொற் சுட்டி நன்குழைகள்
மேவு முறுப்புநிழல் செய்ய வாடும் வேற்குழவீ
ஏவல் கொடுத்தருள வெண்ணி யென்முன் வாராயோ
கூவை வெறுத்தகண்க ளிச்சை கொள்ளு கின்றனவே. 2

பாவே றுஞ்சவையர் மெச்சிப் பாடும் வேற்குழவீ
சேவே றுன்பவளத் தெய்வ வாயை யேதிறந்து
தூவே றின்கரைக ளிங்குச் சொல்ல வாராயோ
கோவே யென்செவிக ளிச்சை கொள்ளு கின்றனவே. 3

பொன்னார் கண்டசர நன்கு பூண்ட தங்கவொளிக்
கொன்னார் வேற்குழவீ நல்ல கொவ்வை நின்னிதழை
என்னார் வந்தீர விங்கு நல்க வாராயோ
உன்னா ருண்ணிலையும் வாயு மூறு கின்றனவே. 4

எண்ணே றும்பலயி லென்ற வேல்பி டித்தசையுங்
கண்ணே செங்குழவீ யென்றன் கண்க ணாடழகே
தண்ணே றும்வதன முத்தந் தாரா யோபிறிது
நண்ணா வென்னுளந்தா னின்னை நாடு கின்றதரோ. 5

முத்தே மாமணியே முல்லை வெட்சி நன்கடம்பு
வைத்தா ரம்புனைந்தென் முன்னர் வாரா யோவுழலுஞ்
சித்தார் வேற்குழவீ யுச்சி செவ்வன் மோந்துகொள்ள
வித்தே யென்மூக்கி னிச்சை மீறு கின்றதரோ. 6

ஐயார் நல்லரையிற் பொன்வ டங்க ளாடவுழல்
வையார் வேற்குழவீ யிங்கு வாரா யோகால்கள்
மையார் கண்மலர்க ளின்பு மல்க மோந்துகொள்ள
மெய்யா யென்மூக்கி னிச்சை மீறு கின்றதரோ. 7

பொன்போன் மேனியிலே நல்ல பூம ணங்கமழும்
இன்பே வேற்குழவீ யிங்கு வாரா யோவிரியா
அன்பார் புன்முறுவல் செய்யு மார்விற் பல்லழகென்
துன்பீ ரம்பெனவே னெஞ்சந் துள்ளு கின்றதரோ. 8

கள்ளார் செங்கரும்பே கண்டு தேனே யின்னமுதுண்
கிள்ளாய் வேற்குழவீ யன்பர் கேளே மாதுமையாள்
பிள்ளாய் கண்ணியொன்று நல்ல பெட்பி னான்றருவேன்
தள்ளா தேகொளற்கென் முன்னர் வாரா யோதகையே. 9

மாண்பார் சந்தமுனி இன்ப வாழ்வே நின்னெழிலைக்
காண்பார் வேறழகு மிங்குக் காண்பார் கொல்லோநான்
ஊண்பா டஞ்சியுனை நன்கு காண்பா னின்றுவந்தேன்
வீண்போ காதபடி யிங்ஙன் வாராய் வேற்குழவீ. 10

*இத்திருப்பத்து, காலை மாலை பூசிக்கப்பட்டுப் பத்தி பிறங்கப் பாடப்படுமாயிற் புத்திரதோடம் நிவர்த்தியாம்; சந்ததி விருத்தியாம்.*

## சமாதான சங்கீதம்.

இராகம்-முகாரி, அடதாளம்.

பல்லவி

சஞ்சல மேன்மனமே சிவனடித்
தஞ்ச மான பினுமே.

அனுபல்லவி

என்செயலாலொன்று மில்லையென்றேநின்றால்
ஏதந்துயரில்லையே-யிந்தச்
சூதை யறிகில்லையே. (சஞ்சல)

சரணம்

**வா**னமிடிந்துதலையில்விழும்படி
வம்புவந்தாலுமென்னை - யந்தக்
கானமயின்முருகையன்றிருவருள்
கைவிடமாட்டாதே. (சஞ்சல)

**ப**ன்னிருசூரிய ரொன்றாயெரிக்குங்கற்
பாந்தம்வந்தாலுமென்னை - யந்தப்
பன்னிருகட்சிவன் றண்ணளிநம்மைப்
பராமரித்துக்கொள்ளுமே. (சஞ்சல)

**செ**ப்பவொணாப்பிழையெத்தனையோமுன்னர்ச்
செய்திருந்தாலுமென்னை - நம்மை
எப்பொழுதும்புரந் தாள்குகப்பிரமத்
திகலருண் முன்னிறுமே. (சஞ்சல)

**நா**லேழுநாலுந்தெளிவாகவோதிமெய்ஞ்
ஞானஞ்சொன்னாலுமென்னை - யந்த
மூலப்பிரணவ சாமிதயாவின்றி
முன்னேறுவதில்லையே. (சஞ்சல)

**கா**ஷாயம்வறகலை பூண்டுசன்னாசியாய்க்
காடுறைந்தாலுமென்னை - யந்தக்
காலுந்தலையுங்கடந்தநிலைதன்னைக்
கண்டபின்பன்றோ கிட்டும். (சஞ்சல)

**பொ**ன்னாசை பெண்ணாசை மண்ணாசை மூன்றையும்
போக்கடித்தாலு மென்னை - கேளுன்
தன்னாணை ஞானமொன்றே தன்னைக் காட்டுந்
தலைவனிடங் கூட்டும். (சஞ்சல)

**ஒ**ன்பது பத்தாறு தத்துவமெல்லா
மொடுக்கியிருத்தலினுங் - குகன்
அன்பருள்கொண்டுசின்முத்திரைதன்னினில்
லானந்தங்கைவல்யமே. (சஞ்சல)

முத்திதருங்குகப்பிரமத்தைவாழ்த்திய
முத்தனண்ணாமலையா - னிரு
பத்மவடிக்கன்பு பண்ணிடுதாசர்
பரகதியெய்துவரே. (சஞ்சல)

## பிழைபொறுக்கமுறையீடு.

*எழுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.*

முத்தரின் முதல்வா முதுமொழித் தலைவா
முட்டிலா வனப்பது பொதுளும்
சித்திர வடிவே திகழருங் குழகா
செங்கையி னன்கயி லுடையாய்
மத்தமு மெழிலா ஏறுகும்பில் லுவமு
மதலையு மணிபவர் மழவா
பித்தனேன் குறைதீர்த் தருள்சிவ னேயென்
பிழைபொறுத் தாள்வதுன் கடனே. 1

நேசமுற் றோர்பா னிறையுநல் லறிவே
நினைவினி லெழுந்தொளிர் சுடரே
மாசினல் லருணா சலத்தவ னிறையே
மலரடி பணிகும ரகுரு
தாசனைக் காப்போ னானெனுந் தேவே
சரவண பவசிவ குகனே
பேசிய பேச்சா னானிங் னிழைத்த
பிழைபொறுத் தாள்வதுன் கடனே. 10

## ஆனந்த முகில்.

சுத்தமா நல்லறிவு தோன்றாத பாதகன்
றுதைபொய் யுளேனென்னினுஞ்
சொல்லுறுதி யில்லாத பொல்லாத வஞ்சகன்
சூதக விநாசனெனினும்
பத்திநெறி பழகாத பாமரன் கொடுமையே
பண்ணுமுழு மட்டியெனினும்
பழிபாவம் யாவுமொன் றாகக் குழீஇயவொர்
பருவுரு வுளேனென்னினும்

எத்தனை சழக்கிங் னிழைத்திருந் தானுநா
னின்னுமறி யாதுசெயினும்
எப்படியு மாதரித் திமிழரு ளிகைத்துநீ
யெனையாள லுன்பரங்காண்
முத்திமுத லேபுகழ் படித்தகோ னாடுமறை
முடிவான கா்த்தவ்வியமே
முத்தரொடு சித்தரும் பருகுமமிா் தம்பொழிய
மூடுமா னந்தமுகிலே. 10

## கழுகுமலைபாதி கந்தகிரிபாதி.

**நா**ன்பாடு பாட்டைநவில் பவா்க்குநல நல்காய்
கான்பாடு வண்டறையுங் கழுகுமலை முருகா
தேன்பாகு கண்டெனவந் தென்னுணனி சேராய்
மேன்பாடு மல்குகந்த வெற்பிருக்கும் வேளே. 8

**எ**னைத்தள்ளி னாலுமெனை நம்பினவா்த் தள்ளேல்
கனைத்தண்டை சிலம்பவருங் கழுகுமலை முருகா
தினைத்தனையு நீங்காத திருவிலெனை வையாய்
நினைத்தவர நல்குகந்த கிரிக்கருணை நிதியே. 9

## காசியாத்திரை

108 **தே**யிர வோடு பகலுமில் சேந்தன் றிருவடியை
யாயிர மாயிர மாப்புகழ் மின்கவி யாா்தமிழா
னோயிர வேம னதிகார மண்ணாநன் னுண்ணுணா்வாம்
பாயிர நூல்கள் பலவுந் தெரிதமிழ்ப் பண்டிதரே.

171 **தா**மாலைக் காதுகுகன் றாள்விழைவோய் வேள்வாடும்
பூமாலைக் கின்பம் பொழியுமெனி - னாமீயும்
வாடாத பாமாலை வம்பாமோ நன்னீதி
கோடாத நீயே குயில்.

242 இவ்வருடக் கந்தசட்டி யேதமற முற்றுமென
வெவ்வருள ருந்துதிக்கு மீசாவென் - றெவ்விநெஞ்ச
மெண்ணியதற் கோரிடையூ றென்கணொரு நோயாயிற்
பண்ணியிடல் யாது பகர்.

244 சேந்தவனே சேந்தவனே சேவடியீ யென்பவர்கட்
போந்தவினை சீத்தருளும் புண்ணியனன் - பாந்தயவா
லிவ்வருடச் சட்டி யினிது நடந்ததிவ்வா
றவ்வருளும் வந்துகொள்க வார்ந்து.

246 மாணிப் பிரப்பன் வலசைதனில் வாழுமெழி
லாணிப்பொன் வேலேந் தருளாளா - வீணிற்செல்
புந்தியுளோர் நட்பறுத்துன் பூவடிசூழ் வாழ்வெனக்குத்
தந்ததுபோன் மேல்வீடுந் தா.

எத்தனை யோதலஞ் சுற்றிவந் தேன்மன மெட்டுணையு
மத்தன் குமாரன் முருகனை நாட வடங்கவில்லை
பத்தர்கள் வாழ்பிரப் பன்வல சைச்செம் பதிதனிலே
சத்திய மாகக்கை கூடின தாலினித் தாழ்விலையே.

-கட்டளை கலித்துறை 13

காலமே யாவையுந் தந்திடுங் காக்குங் களையுமந்தக்
காலமோ காளையங் கந்தவேள் கையகப் பட்டதென்றால்
ஆலமுண் டோனுமைக் கோதுண்மை மாற்றமுண் டாகலினுன்
பாலனா மென்னையு மூழ்கட்டு மோவெம் பராபரனே.

முதல் மண்டலம் - 64/6.

## திருப்புகழ்.

கருப்பற் றூறிப் பிறவாதே
கனக்கப்பாடுற் றுழலாதே
திருப்பொற் பாதத் தநுபூதி
சிறக்கப் பாலித் தருள்வாயே
பரப்பற் றாருக் குரியோனே
பரத்தப் பாலுக் கணியோனே
திருக்கைச் சேவற் கொடியோனே
செகத்திற் சோதிப் பெருமாளே.

**நா**த விந்துக லாதீ நமோநம
வேத மந்த்ரசொ ரூபா நமோநம
ஞான பண்டித ஸாமீ நமோநம வெகுகோடி

நாம சம்புகு மாரா நமோ நம
போக அந்தரி பாலா நமோநம
நாக பந்தம யூரா நமோநம பரசூரர்

சேத தண்டவி நோதா நமோநம
கீத கிண்கிணி பாதா நமோநம
தீர சம்ப்ரம வீரா நமோநம கிரிராஜ

தீப மங்கள ஜோதீ நமோநம
தூய அம்பல லீலா நமோநம
தேவ குஞ்சரி பாகா நமோநம அருள் தாராய்

ஈத லும்பல கோலால பூஜையும்
ஓத லுங்குண ஆசார நீதியும்
ஈர முங்குரு சீர்பாத சேவையு மறவாத

ஏழ்த லம்புகழ் காவேரி யால்விளை
சோழ மண்டல மீதே மநோகர
ராஜ கெம்பிர நாடாளு நாயக வயலூரா

ஆத ரம்பயி லாரூர் தோழமை
சேர்தல் கொண்டவ ரோடே முனாளினில்
ஆடல் வெம்பரி மீதேறி மாகயி லையிலேகி

ஆதி யந்தவு லாவாசு பாடிய
சேரர் கொங்குவை காவூர்ந னாடதில்
ஆவினன்குடி வாழ்வான தேவர்கள் பெருமாளே.

## வாழ்த்து.

விழுமிய பொருளாய் நாளு மிளிர்குகக் கடவுள் வாழ்க
குழுமிய தொழும்பர் வாழ்க குருவுடன் சீடர் வாழ்க
தொழுகுலத் தவர்கள் வாழ்க துகளறு தவங்கள் வாழ்க
வழுவறு மறையு மாக மமுஞ்சொன முடிவு வாழ்க.

பன்னிரு தடந்தோ ளெந்தை பாதமென் கமலம் வாழ்க
தென்னவிர் திருவ தேவ சேனையங் குறமின் வாழ்க
மின்னயி னவிரம் வாழ்க வியனரு ணகிரி வாழ்க
பன்னருட் குரவர் வாழ்க பரிவுடைச் சீடர் வாழ்க.

## திருக்கந்தர் திருப்பல்லாண்டு.

*அறுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.*
*பண் - பஞ்சமம்.*

பொன்னுயர் நாட்டிறை புத்திரி தனைமன்றல் புரிந்துசெந் தினைகாத்த
மின்னினை மாமணஞ் செய்தரு ணாடிய வித்தகா் தமையாண்டு
நன்னல நல்கருள் வேந்தென விளங்குபு நான்மறை களும்விரித்துப்
பன்னரும் பரமென விருக்குநந் தேவுக்குப் பல்லாண்டு கூறுதுமே. 1

அன்னையின் மேம்படு கருணையி னாற்குக னடிகளைப் புகழ்தாசன்
தன்னைமெய் யடியவ னாக்கவென் றகம்புறஞ் சார்ந்துவந் தேற்றமதி
சொன்னவ னாயனு பூதிசொன் னவற்குறு சூரறுத் தெவராலும்
பன்னவொ ணாநல நல்கிய குகனுக்குப் பல்லாண்டு கூறுதுமே. 10

## கட்டியம்.

ராஜாதி ராஜ ராஜ பரமேச்வர குமார பகவானுக்கு ஜய
தேவாதி தேவ தேவ பரமேச்வரசிவஸுப்ரஹ்மண்யனுக்கு ஜய
ஸ்ரீவல்லி தேவசேனா சமேத சா்வ சுப லக்ஷணனுக்கு ஜய
ஞான சக்திதர ஞானப்பிரகாச சுவாமிக்கு ஜய
குக்குடத் துவஜ ஹஸ்த வஜ்ர பாணிக்கு ஜய

மயூரவாகன மகாகிருபாநிதிக்கு ஜய
அருணகிரிநாத ஆனந்த பராபரனுக்கு ஜய
மஹாதேஜோ மண்டலத்தாரைக் காத்தருள் கடவுளுக்கு ஜய
பாம்பன் ஸ்ரீமத் குமரகுருதாச சுவாமிகளுக்கு ஜய.

## ஸ்ரீமத் பாம்பன் சுவாமிகள் மீது ஸ்ரீலஸ்ரீ பாலசுந்தர சுவாமிகள் அருளிய சோடச நாமார்ச்சனை.

சுபே சோபனே முகூர்த்தே அத்ய ஸர்வ சுபதினே
அஸ்மத் குருமூர்த்தே : உபய அருணகிரி பாம்பன் ஸ்வாமின:
பாதார விந்தயோ : அஸ்மதா தீனாம் பக்த ஜனானாம்
ஸர்வாபீஷ்ட ப்ரதாத்ருத்வ ஸித்யர்த்தம்
ஸோடச நாமார்ச்சனம் கரிஷ்யாம :

ஓம் மஹா தேஜோ மண்டலாசார்ய பாம்பன்
ஸ்ரீமத் குமர குருதாச ஞான தேசிகாய நம :

ஓம் ஜடாமஸ்தக காஷாயாம்பர பஸ்ம ருத்ராக்ஷ தாரண
திவ்ய மங்களவிக்ரஹாய நம :

ஓம் பாஹ்யாப் யந்த்ர விஷயாபிலாஷ சூன்ய, தன்ய
புருஷாய நம :

ஓம் தமோ மண்டலாதி தூராய நம :

ஓம் ஹ்ருதயாம் போஜ மத்ய குஹ மந்த்ரானுபவ
ரஸிகாய நம :

ஓம் பிரணவ பரம்பரா கதாய நம :

ஓம் தகராலய ரகஸ்ய சாஸ்த்ர ப்ரதர்ஸகாசார்யாய நம :

ஓம் திருப்பாபாஷ்ய கர்த்ரேண நம :

ஓம் ஏக பத்ய பஞ்ச விம்ஸத்யுத்தர ஸதபங்க்யா ப்ரதர்ஸித
அமானுஷ சக்தி விஸ்மித பண்டித வந்திதாய நம :

ஓம் ஷண்முக கவசாதி கிரந்த ப்ரவர்த்தகாய நம :

ஓம் ஷட் ஷஷ்டி ஷட் ஸதோத்தர ஷட் ஸஹஸ்ர பத்ய
ப்ரதர்சித குமார பரமேஸ்வரைக ஸமர்ப்பித சித்தாய நம :

ஓம் பஹுமூர்த்தீனாம் பஹ்வீஸ்வர புத்யா வந்தன
நிராகரண பூர்வக ஏகேஸ்வர குமார குரு வந்தனேன ஸர்வ
தேவதா வந்தன ப்ரதர்ஸகாய நம :

ஓம் ஸ்வஸிஷ்யானாம் ஷடக்ஷர மந்த்ர தண்ட த்யான
கிரீடதானேனச முக்தி நகர ப்ரவேஸகாய நம :

ஓம் தன விருத்த, வயோ விருத்த, வித்யா விருத்த, ஸேவித ஞான
விருத்தாய நம :

ஓம் ஸ்வஸேவாகத ஸகல ஜன துஃக நிவர்த்தகாய நம :

ஓம் ஸ்ரீ சென்னபுரி தக்ஷிண வான்மீகி தடஸ்ர்ஸாதித
ப்ரணவாகார மயூரபுர வாஸினே நம :

ஓம் மஹாதேஜோ மண்டல குரு உபய அருணகிரி அத்தியாச்சிரம
சுத்தாத்வைத வைதிக சைவ சித்தாந்த ஞான பானு பாம்பன்
ஸ்ரீமத் குமர குரு தாஸ முனீந்த்ர சரணார விந்தயோ : நாநாவித
பரிமள மந்த்ர பத்ர புஷ்பாணிம் ஸமர்ப்பயாமி.

ஓம் சாந்தி சாந்தி சாந்தி

## சடக்கர ஜெபமகிமை.

சகரமுத லாறு மாசில் பதியகர மாவ தாவி
சரதநம பாச மாமெலாம்
நிகழுமொழி மேனி லாவு பொருள்சரவ ணேச னான
நிருமலன மாவெ னாகுமே
பகரிவையொ டோமு மேறி னெடியதச மாம்வி சேட
பலனுறவ வாவு மூழுளோர்
புகழுமெதை யேனும் வீர வுறுதியொடு கோடி யேசெய்
புனிதமுறின் வீடு மாள்வரே.

- பல்சந்தப் பரிமளம் ஆசிரிய இயல் 139

# குமரவேள் பதிற்றுப்பத்தந்தாதி.

## முற்றும் பத்துவகையாசிரிய விருத்தம்.

### *1-ஆவது எண்சீர்க்கழி நெடிலடியாசிரியவிருத்தம்.*

**உ**லகத்தே வருபிறப்பு மிருப்புஞ் சாவு
மொழியாத துன்பமெனப் பெரியா ரெல்லாம்
அலகற்றே யிலகுமுன தடியே சேர்ந்தா
ரவ்வடியே பெறும்பேறென் றடியே னுந்தான்
கலகத்தா லுழலுமனந் தனைநி றீஇக்
கருதுற்றே னினதுகழ லதனை விட்டு
விலகத்தா னினியென்மன நினையு மோவென்
வினைகொன்றாள் குருமணியே குமர வேளே. 1

குமரவேள் குமரகுரு வாகா வென்றே
குயின்றுகுயின் றேபன்னா ணின்றேன் மாற்றார்
சமரவே ளுனையன்றி வேறோர் தெய்வந்
தமியேற்கின் றெனவின்று காறு முள்ளே
அமரவேண் மறையோதி யாளா ளென்றே
யரற்றினேன் விரத்திநெறி புக்கேன் மோகப்
பிமரவேள் வயப்பட்டார் போலுண் ணொந்தேன்
பிரானினது கிருபைநனி பெற்றே னல்லேன். 2

**பெ**ற்றார்நீ பிறந்தார்நீ பேணு வார்நீ
பேசரிய வன்புளார்நீ பிரிவில் லார்நீ
உற்றார்நீ யுரியார்நீ யென்றே நிற்பா
ருறுநெறியே நானுநிற்க வுனைத்தொ டர்ந்தேன்
கற்றார்போற் கவிதைபல பாடி யுன்றன்
கனைகழலைத் துதித்தேனின் கருணை யாக்கம்
அற்றார்போ லலைகின்றே னினியா ரென்னை
யாதரிப்பார் சொல்லியரு ளயில்வேலையா. 3

ஐயமிலா நின்னுலகு வேண்டி யிங்கே
யருமலர்நீர் கொடுபூசை புரிவார் போலத்
தெய்வமெலா மேத்துகுக நானும் யாதோர்
சிற்றுருவில் வழிபடற்குப் பலவி கார
வையமிலா ஞான நவி னூல்க ளோரென்
மனமிசையா தருள்சுரந்து நீமுன் சொன்ன
துய்யவிலா சச்சொலுமே யிடங்கொ டாது
துரியநிலை மேனின்றே சூழல் சாலும். 4

சூழேனோ திருவருளைச் சூழ்ந்து சூழ்ந்து
துரியமய மாய்நின்று சோதி வீட்டில்
வாழேனோ வானந்த மான கண்ணீர்
வடியேனோ படியேனோ மதுக ரம்போல்
வீழேனோ விரண்டற்ற நறிதா கேனோ
விமலசிதா காசநடு விளங்கு முன்னைத்
தாழேனோ வெனையாளுங் கருணைக் கண்ணே
தந்தைக்கு முபதேசஞ் செய்த சாமீ. 5

செய்தவமொன் றில்லாத வேழை யேனைத்
திண்புவியின் மானுடனாத் தெரித்தன் மாறாக்
கைதவமென் றெண்ணியிழி நாய்பே யென்னக்
கழறிடவென் றாலுமறி வாளர் பல்லோர்
உய்தவமில் பேய்நாயென் றேதம் மைத்தா
முரைத்தமையா லவைபொருந்தா மூடர் தாமும்
வைதவலஞ் சூட்டுதடிக் கழுதை யென்றே
வழங்கலியை புடைத்துவைவேல் பரித்த மன்னே. 6

மன்னவர்க டொழுமன்னே மயிலூர் மன்னே
மறுவின்மணி மலையேயென் மனத்தி னுள்ளே
இன்னமுதாய்க் கற்கண்டாய்ச் சீனி தேனா
யிணையறுமுப் பழச்சுவையா யினிக்க வேழை
என்னதவ மினிச்செய்வேன் றவத்திற் கேற்ற
விகலுடம்பு பெறாப்பாவிக் கிவ்வா றேங்கிப்
பன்னமனு வாப்பிறந்த பரிசே யல்லாற்
பாழ்த்தவினை நூறுபரி சிலையோ சொல்லாய். 7

சொல்லாத சொல்லொன்றைச் சொல்லா மற்றான்
சொல்குருவின் சொலினிற்குஞ் சுகுர்தர் செய்கை
கல்லாத விரண்டுகான் மாடா யென்போற்
காசினியி னிற்குநரு முண்டோ யாண்டும்
பொல்லாத பவக்கயவர் குருவாய் மூடம்
பொலிமனுடப் பதடியாய்ப் புழுத்த நாயாய்
எல்லாத பந்தெரியாச் சிதட னாகி
யிருக்கு மெனக் கயிலோயுன் களிப்பெங் கெய்தும். 8

எய்தரிய பரத்துவமுன் னடியார்க் கீயு
மிருங்கருணை யிந்நாய்க்கு மிரங்கு மாயின்
வெய்திரிய நிலைநின்று மேலோ னாவேன்
வேறொன்று மேல்வேண்டே னருளல் லாமே
உய்திபெற வழியில்லை யெனல்பொய் யாக்கட்
டுரையன்றோ வெப்படியு முவகை யன்பு
செய்தருள வருதியருட் கடலே யின்பத்
திரளேசெவ் வேளேசெஞ் சுடரே தேவே. 9

தேவேசெம் மணிச்சுடரே சிதாகா சச்செஞ்
செழுஞ்சுடரே யிதயசிதா காச மேவு
பூவேயப் பூவிலமர் குகனே யுன்கண்
பொற்பொடெனை நோக்காதோ புனித நாத்தான்
வாவேயென் றழையாதோ மலர்த்தாள் சென்னி
மன்னாதோ மின்னாதோ மறந்து சூழ்மா
நோவேயில் புலத்தினெனை யிருத்தி டாதோ
நுண்ணுணர்வி லாவெளியே னுய்யு மாறே. 10

## *2 -ஆவது அறுசீர்க்கழி நெடிலடியாசிரிய விருத்தம்*

விளம் மா தேமா விளம் மா தேமா

உய்யருண் மார்க்க மேது முணர்கிலாப் பேதை யேற்கு
மெய்யருள் காட்டு நீதான் விளக்கிய நிலைவிட் டெனக்
கையரு ளொருவ னாகிக் கவலைமா கடலில் வீழென்
பொய்யருண் மார்க்க மாற்றிப் புரப்பவ ரினியார் வேலோய். 11

வேலவா விமலா வன்பர் மிடிதுமித் தருள்வள் ளாலிஞ்
ஞாலவா தனைசெற் றாளு நப்பரா பரனே துன்பஞ்
சூலவா வெனவே கத்தித் துயர்க்கணீர் வடியா வென்னைப்
பாலவா வெனவே கூவும் பரிசையு முறுமோ வுன்னா. 12

உன்னய வருளை யீயீ யுயர்பத மீயீ யென்று
சொன்னசொ லனைத்தும் போலி தொழுததும் போலி யன்பாம்
அன்னையை நாடி நாடி யழுததும் போலி யென்றே
பன்னுமிப் பாவி யெய்தும் பயனெதோ பகர்வே ணாதா. 13

நாதநா தாந்த ஞான நாயகன் முருக னென்றுன்
பாதநா னினைந்த துண்டு பரமவு னன்பை நேடி
ஏதநா வலற மண்டை யிரியவெஃ கடித்தே னல்லேன்
வாதநா வுடம்பே முற்று மல்கிட நின்றே னந்தோ. 14

அந்தமு மாதி யுந்தா னில்பொரு ளாகி வீடும்
பந்தமு மிலியா யென்னுட் பரமனா யறிவாய் நாளுஞ்
சொந்தமு மாகி நிற்குஞ் சுப்பிர மணிய மேயென்
மந்தமும் வினையு மோவ வரமனஞ் செய்யின் வாழ்வேன். 15

வாழ்விலே னினுமோர் காலுன் வாய்மலர் மாற்றங் கேட்கின்
தாழ்விலே னாவே னாளுஞ் சரவண முத்தே நீலம்
போழ்விலே யிடுக்க ணேசால் புரையுடற் சுமையி னீக்க
வீழ்விலே யெனைத்தான் வைத்து மேவநீ நினைத்தல் வேண்டும். 16

நினைப்பவர் நினைப்பி னின்று நினைப்பது முடிக்கு மெந்தாய்
உனைப்பர மெனக்கொள் ளாதா ரொன்னல ரவர்க ணேயம்
எனைப்பர மாணு வேனு மெய்தொணா வாறு காத்தி
வினைப்பரி சறுத்தாள் சேந்தா வீடுபேற் றருண்மா விண்ணே. 17

விண்ணவர் பல்லோர் நம்பும் வெறுக்கையி னறிதா முன்றன்
தண்ணலர் நோன்றா ளென்னுஞ் சரதநன் குணர்ந்தேன் வாளா
மண்ணவர் நடைநான் கொள்ள வழியிலை யினியுட் கோவில்
உண்ணட மிழைத்தி யாதி யொருவனே முருக வேளே. 18

முருகுறு களபந் தோயு முகிழ்முலைக் கொடிச்சி யெந்தாய்
உருகுறு படப்பைந் நாக வுரிபுரை யுடைபூண் வீக்கி
அருகுறு தெய்வத் தந்தி யகமகிழ் தலைவா வுன்றன்
குறுகுறு கொலுக்கண் டாலுங் கொடியனேன் குறைநில் லாதே. 19

தேவனே சிவனே வேலின் றெய்வமே வரம்பில் லாத
நோவனே யானேன் ஞான நோக்கம தறியே னீதான்
தாவனே யஞ்சே லென்னோர் தண்ணுரை யளித்தா லின்பன்
ஆவனே யருளி னோக்க மறிகிலேன் மிடிய னேனே. 20

## 3-வது அறுசீர்க்கழி நெடிலடியாசிரிய விருத்தம்.

காய் காய் காய் காய் மா தேமா.

மிடியில்லா நினதடியர் பெருவாழ்வு
பெறுமாறு விபுலை தோன்றி
அடியில்லா மடப்பேயொத் தவனிமிசை
யுருண்டழுமா றமல வுன்றன்
செடியில்லா வருளுள்ள மவுனமதுற்
றிருப்பதென்கொல் சிவப்பே றுள்ளார்
குடியில்லா நகரோநின் னிருக்கையருட்
கோயில்வளர் குமர நாதா. 21

குமரகுரு தாசனிவன் குணமில்லா
னறிவில்லான் கோதே யுள்ளான்
அமரருல கினுமுய்ய வறமில்லா
னெனமனுட ரறைவ தற்கோ
தமரரிய தாய்மனைமற் றெல்லாம்விட்
டிங்ஙனமே தனிய னானேன்
சமரவயில் பிடித்ததலை வாபிழைக்கு
மாறறியேன் சழக்க னேனே. 22

சழக்கறுமு னடிக்கமலம் வாயாமை
யாற்கவலை தானே ஞானப்
பழக்கமுறு மெனையுயிரோ டும்பிடுங்கித்
தின்னுகின்ற பருந்தா யிற்றால்

வழக்கறமி லார்கருதொ ணாப்பரம
வாரமுத மழவே யுன்னை
இழக்கவறி யாமதியொன் றாலுயிர்பெற்
றிருக்கின்றே னின்று காறும். 23

இன்றிருந்து நாளையொழி பொய்வாழ்வி
லினுமிருக்க வெனது நெஞ்சக்
குன்றிருந்து மிளிர்குமர குருவேயிந்
நெஞ்சநினை யாது கோது
கொன்றிருந்து நினையடைய நினைந்துள்ள
தவ்வாறு குயிற்றாய் கோணை
மன்றிருந்து நடநவிற்று மொருவனருண்
மதலாயென் மதியே மன்னே. 24

மன்னுமறை முதலேயென் முதலேகண்
மணியேசெம் மணியே தூவி
துன்னுமர கதமயிலிற் பொன்மயிலில்
வெண்மயிலிற் றுவரா மேரு
என்னவரு துரையேயென் குறையறிவை
நிறையறிவ தாக்கி யென்றும்
பொன்னடியி னிருக்கவும்பொற் புளதோசொல்
லூர்திரியிப் புழுத்த நாய்க்கே. 25

புழுத்தலையு நாய்க்கும்விடக் குண்பொழுதோர்
சந்தோடம் பொருந்து மிந்த
வழுத்தலைமை யுடைநாய்க்கிங் கெதுபொருந்துந்
துயர்பொருந்து மறலி மேலுங்
கழுத்தலையி லிருத்திமிதித் தாலுமுனை
நினைந்தழுவல் கழலெண் ணாமை
கொழுத்தலையு முயிர்க்கினைய பலனன்றி
வேறுளதோ குகமா தேவே. 26

தேவநடை பொய்யாகி யுலகநடை
மெய்யாகிச் சீலம் பொய்யாய்ப்
பாவநடை மெய்யாகிப் படிவர்வர
வரிதாகிப் பதகர் மிக்கே

ஆவனடை பெரிதாகி யுளவிந்தக்
கலிகாலத் தருணா டிந்தச்
சீவனடை முன்றவமி லாதகுறை
வேயாகுந் திணிவேற் காளாய் 27

திணிகிருபை யிரங்கவிலை யென்றுதலை
யடித்தழுது திரிந்தே னில்லை
அணிகிருபை யொடுமுகத்தி லறைந்தழுதே
னில்லைவிழுந் தழுதே னில்லை
பணிகிருபை யுடனிலத்திற் கடகடெனப்
புரண்டழுது பதைத்தே னில்லை
கணிகிருபை யுடையவிளம் பெருமவிவ்வா
றியம்புற்றேன் கன்னெஞ் சேனே. 28

கன்னெஞ்சோ டேன்பிறந்தேன் கடையவரிற்
கடையனெனக் கடந்தோர் கூறப்
புன்னெஞ்சோ டேன்பிறந்தேன் புண்ணியமொன்
றில்லாத பொல்லே னுக்கும்
நன்னெஞ்சோ டமருநிட்டை நல்குவையோ
வங்கணெய்தி நளின பாதம்
என்னெஞ்சோ டிருக்கவருள் செய்வாயோ
சொல்லிகல்வே லிறையே யன்றே. 29

இறையவனெம் மான்குமர னெனப்புகழ்ந்த
வருணகிரி யீசா கந்தா
மறையவனுன் பூங்கழலை நம்பியநான்
கருவிகளின் வயப்பட் டோவுங்
கறையவனென் றாகாதென் னுடற்சுமையை
யினிதிறக்கிக் காத்து ஞானத்
துறையவனை யொல்லையினி லினிவேண்டே
னொருசிறிது முலகைத் தானே. 30

*4-வது எழுசீர்க்கழி நெடிலடியாசிரிய விருத்தம்.*

**தா**னவர் குழுவைச் சவட்டிவிண் ணவர்தந்
தடவிசும் புலகவர்க் களித்து
வானவர் முதல்வ னாயொளி ராறு
மலர்முக முதுபதி யேநின்
கானவ மணியங் கழனடங் காணக்
கண்பெறு பாக்கிய மில்பேய்
மானவ னெனவிங் கிருக்குமென் பனுவன்
மதித்துவந் தருள்புரி வாயோ. 31

**அ**ருணெறி யார்க்கின் னருடரு மாதி
யற்புத வருட்சிவக் கொழுந்தே
மருணெறி யேனை மாணருண் மருவா
வறுமையை யடிக்கடி நினைந்தே
இருணெறி யுழலும் பேயெனச் செய்த
வென்விதி யினும்வலி தாயின்
தெருணெறி பிடித்து வாழ்ந்திடு வேனோ
தெய்வமே செய்வதொன் றறியேன். 32

**அ**றிவினை யறிந்தார் நெறியினில் லாமே
யருண்மொழி தனைப்பிடி யாமே
செறிவினை யறுக்கு மனுச்செபி யாமே
திரிமனக் கால்களை யாமே
பொறிவினை கெடுத்தார் போற்பல வாயாற்
புலம்பவுங் கலங்கவு மானேன்
வெறிவினை முருக்கு மயிலர சேயுன்
மெய்யருட் செயலறி யேனே. 33

**ஏ**னிங்ன் மிகவும் வருந்துகின் றனைவா
வென்னுழை யெனவுன தருணாத்
தானிங னுரைக்கி னதுவெனு ளமுதாய்த்
ததும்பியென் கம்பலை செறுத்துத்

தேனினு மதுர வட்டினுஞ் சுவைசெய்
தீங்கரும் பினுமினி தினித்து
வானினு முயர்பே றளிக்குமன் றோசெம்
மழமுனி யேயரு ளாயோ. 34

ஒய்வரு பிறவித் துயர்மன நனவி
லோயுமட் டுளதென லருநூல்
ஆய்வறு மனுட ரறிவர்கொல் லோவன்
னவர்களு ளொருவனென் றிடவிந்
நாய்வர விருப்பி னுங்கருத் தழுங்கா
நலத்தினை யேனுமுற் றொழியுஞ்
சேய்வர வினிலஃ தோயுமென் றாயிச்
செனிப்பினுக் கெந்நல முளதே. 35

உளக்குகை தனிலென் மனத்தினை நிறுவி
யுன்றனை நினைந்திருந் தேயிவ்
வளக்கரை மறையக் காணிடத் தின்பா
யகஞ்சிறி திருப்பவு மேலே
களக்கறை மனது முளைக்கவு மாமென்
கதியைநன் கோர்ந்துசெந் நூறு
தளக்கழ லெனது தலைமிசைச் சூட்டத்
தயவுசெய் வேற்பெருந் தகையே. 36

பெருந்தகை யாமுன் னாட்டமென் னறிதும்
பேதவிம் மேதினி யுணர்வாய்
வருந்தகை நோயு முற்றிவ னுழலு
மடனெனை நலஞ்செய வெனவுன்
அருந்தகை யருளெண் ணிடினொரு கணத்தே
யமுதுரு வாயிடு வேன்வேல்
இருந்தகை யரசே யடியவர் மனமா
யிருந்தருள் கருணையங் கடலே. 37

கடலினு மிருந்தாய் மலையினு மிருந்தாய்
கதிர்மதி யுடுவினு மிருந்தாய்
கெடலறு விசும்பு வளியினு மிருந்தாய்
கெழுவுயிர்த் திரடொறு மிருந்தாய்

அடலயின் முதல்வா வுள்ளிடத் துணைநன்
கடையவென் றனுதினங் கலுழ்ந்தே
உடலுயிர் வருந்தாக் கடியநெஞ் சேனிங்
குயிருட னிருப்பது நலமோ. 38

நலமிழைத் தவர்க்குங் கொடுவினை யிழைத்தேன்
ஞானநூ லாளரைப் பழித்தேன்
மலமொழிக் கயவர்க் கினியன செய்தேன்
வளருயி ரெண்ணில வதைத்தேன்
கலமிழைத் திடுபொய் யுரைபல வுரைத்தேன்
கரவடத் தொழில்களுஞ் செய்தேன்
சலமழித் தருள்செவ் வேளெனு மிறையே
தாடுணை யெனவிங்ஙன் போந்தேன். 39

**போ**ந்துயர் தனக்கு மஞ்சுகின் றேனிப்
புலாலுட னோய்க்குமஞ் சினன்மேல்
ஆந்துயர் தனக்கு மஞ்சுகின் றேனிவ்
வருந்துய ராம்பெருங் கடலை
நீந்துயர் பதியி னிட்டையி னீதா
னிறுத்தினுய் வேன்சுடர் கிளர்வேல்
ஏந்துயர் பரம குருமணி யேயென்
னிதயபங் கயம்வள ரொளியே. 40

*5-வது அறுசீர்க்கழி நெடிலடியாசிரிய விருத்தம்.*

மா மா காய் மா மா காய்

**ஒ**ளியே யொளிக்கு முதற்பொருளே
யுயர்மா ணிக்கப் பெருவரையே
தளியே யிருக்குந் தெய்வமெலாந்
தாழுஞ் சரணக் குமரேசா
களியே தருமுன் றிருவடியென்
கதியா யென்று மினிதெய்த
எளியே னியற்றுஞ் செயல்பற்றா
தேனோ விவ்வா றுழல்கின்றேன். 41

உழலு மனநன் கோய்ந்திடுமா
றுனதொண் பாத வருளைநினைந்
தழலு முறுமோ திருவடிப்பே
றணித்தோ சேய்த்தோவெனவேங்கி
விழலு முறுமோ வினியென்றே
விம்மிச் சாம்பென் புந்தியுறு
தழலு மடமு மொழியவரு
டந்தால் வாழ்வேன் சடக்கரனே. 42

சடமெய் யிலையென் றசடமுணர்ந்
தமைபோ லறிவைச் சாரேனோ
திடமெய் யுள்சீர் நில்லேனோ
சீவ முளையைக் கொல்லேனோ
மடமெய் யெவையுங் கடியேனோ
மாணா ரமுதங் குடியேனோ
தடமெய் யழகார் மயிலில்வரு
தனிநா யகனே தவறுடையேன். 43

உடையாய் கதம்பத் தொடையாய்நா
னுற்றார் பெற்றார்க் கும்முதவா
நடையா னெனவிங் கானேனுன்
னட்புக் கயலு மானேன்வேற்
படையா னடியே பாடுகமென்
பரிவே யுள்போற் பலகுழறென்
கடையா ரினிதா மன்புசெயுங்
கருணைக் குருவா குவரன்றே. 44

அன்று மயங்கே னிற்கருள்வே
மஞ்சே லெனுநற் பொருள்படுமா
றுன்ற னறுஞ்செவ் வாய்மலர்தா
னுரைத்த வுரைபொய் யாதெனநான்
இன்று வரைநம் புற்றேன்மே
லெளியேன் பொல்லா விதியாதாய்
நின்று கெடுதி செயுமோவே
னிமலா சிறிது மறியேனே. 45

**சி**றுமை தணந்த வாய்ஞானஞ்
செப்பி யீவோ ரிடமேற்கக்
குறுமை தணந்த கையுளனாய்க்
கொடுக்க வக்கை யேயிலனாய்
மறுமை நயங்கொன் மூதேவி
மல்க விருந்த வெனக்கயிலோய்
பொறுமை யருளா னாவமுதம்
பொழியுங் கொல்லோ சிறுவரையும். 46

**வ**ரையே முலைக ளிடைகொடியே
மதியே வதனங் கடல்விழியே
விரையே யளகங் கார்முகிலே
மிளிருங் கொவ்வை யதரமெனப்
புரையேய் மடவார் மயனின்ற
புகரேற் கையார் வேலோய்கால்
மரையே நினைந்திவ் வாறழவோர்
மனமுண் டான ததிசயமே. 47

**ச**யமே யுளவே லிறையவனே
தமியே னிழைத்த தவறெண்ணிப்
பயமே யுளவென் சிந்தைநலம்
பற்றா மகிழு மாயினது
வயமே யணையா வொருமலடி
மகப்பே றுற்ற தொக்குமருள்
மயமே யெனது முகம்பார்த்து
வாரா யோவென் களைகண்ணே. 48

**க**ண்ணே யறவர் களிப்பேயென்
கவலை காது மருமருந்தே
விண்ணே கனகத் திருவரையே
விறல்சால் கோழிக் கொடியரசே
பண்ணே னினது பரிசுத்த
பாத மலர்க்காம் பூசனையிம்
மண்ணே யினும்வந் துழலற்கே
மட நெஞ் சுளது கொல்லோசொல். 49

**சொ**ல்லார் சுருதிப் பிரணவநீ
    துயர்சா லுயிர்கட் கருளிறைநீ
இல்லார் குறைகண் டீயிறைநீ
    யெளியே னுண்ணோ யிறுமாறு
வல்லா ரருளைத் தாராயோ
    வைய மதனி லென்போன்ற
கல்லார் பொல்லா ரெல்லார்க்குங்
    கதிதந் தருளுங் குகதேவே. 50

*6-வது அறுசீர்க்கழி நெடிலடியாசிரிய விருத்தம்.*

மா மா மா மா மா காய்.

**கு**கனே சிவனார் குருவே யென்னுட்
    குதிகொள் செயலெல்லாம்
அகனே சவருட் செயலென் றொருகா
    லடியேன் மனமான
இகனே ருறவே சும்மா விருப்ப
    விவையென் வினையென்றென்
அகனே வருந்தி யழுமா றொருகா
    லயர்கின் றவர்யாரோ. 51

**யா**ரா னலனுண் டாமென் றெண்ணி
    யாரைச் சூழ்கின்றேன்
ஆரா வமுதே யயில்வே லரசே
    யறியா யோசிறிதும்
வாரா யடியார்க் கினியோய் பெரியோய்
    மருளென் முகவாட்டந்
தீரா யுனதின் செம்மாப் பளியாய்
    சேராய் சேவடியே. 52

**அ**டியேன் பலபுண் ணியநீர் மூழ்கி
    யானா மூர்த்திகளாம்
வடிவே நீயென் றேதாழ்ந் தேனூர்
    வசித்தே னெனதெண்ணம்

முடிவே யுறலில் லாமே வருந்தென்
முகவாட் டந்தவிராய்
கடியே றமுதக் கழலாய் முக்கட்
கத்தன் றிருமதலாய். 53

திருவா ரெந்தத் தலமுற் றாலுந்
தெய்வந் தொழுதாலும்
பெருவா ரிபடிந் தாலுந் தெய்வப்
பெயர்கள் சொற்றாலும்
மருவா ரளிநக் கடம்பார் மார்பா
மங்கா வொளியாமுன்
உருவா னதிலே படியா விடினென்
னுள்ளம் படியாதே. 54

உள்ளும் புறமும் பரிபூ ரணமா
யொளியா யுளவுன்னைத்
துள்ளுங் கறைநெஞ் சுடையேன் றேடுந்
தொழின்மா மலைநின்று
தள்ளும் பவனத் தலைப்புண் டொல்கிச்
சயிலம் போயிற்றென்
றுள்ளுஞ் சிதடன் செயலொக் குமரோ
வொளிவேற் படையானே. 55

படைப்பாய் காப்பா யழிப்பாய் மறைப்பாய்
பந்தத் துணித்தாள்வாய்
அடைப்பா யறிஞர்க் கினிப்பா மருந்தே
யயிரே யருந்தேம்பா
கிடைப்பா யிழுதே பலவின் சுளையே
யேனைத் தீங்கனியே
துடைப்பா யெனதுட் டுயரெல் லாநற்
றோகைப் பரியானே. 56

பரிபூ ரணவே லிறையே யெளியேன்
பன்மந் திரமெண்ணேன்
விரிபூ விலையா திகளா னோய்வெல்
வினையும் பிடியேன்மால்

அரிபூ சனையின் மாயச் சித்தி
யறியேன் குறிசொல்லித்
திரிபூ வினையுந் தெரியே னிவனுய்
திறமே தோசொல்லாய். 57

**சொ**ல்லார் சுருதிப் பொருளே வேற்கைத்
துரையே செம்பெல்லாம்
வில்லார் பொன்னாக் கிடுவேன் காயம்
வீழ்த்தா ரைத்தருவேன்
கல்லார் மனமுங் கரையச் செய்வேன்
கடவுட் காட்டுவலென்
றல்லார் வினைசெய் திடவும் பொருந்தே
னடிசிற் கென்செய்வேன். 58

**எ**ன்னா யகவே லிறையே யுலகத்
தெச்சித் தியுமில்லா
என்னா னயமின் றென்றே யகன்றா
ரென்னைத் தெரிந்தாரும்
ஒன்னார் புரைநா னுண்ணுப் பில்லா
வுணவே யளிப்பாரும்
இந்நா ளுணுகுற் றனர்கா சென்கை
யிடினுங் கொள்வேனோ. 59

**கொ**ள்ளச் சயிலா கள்ளிப் பழமுங்
கொண்டேன் பசித்தோர்நாள்
எள்ளத் தனையு மன்பிற் பிரியா
வியல்பும் பத்தியுமோங்
குள்ளக் குமரா னந்தப் பெயர்மா
துணவீ யாவிடினென்
பொள்ளற் சடநில் லாதே சென்னைப்
புகழும் மாதைக்கா. 60

*7-வது எழுசீர்க்கழி நெடிலடியாசிரிய விருத்தம்.*
*மா கூவிளம் மா கூவிளம் மா கூவிளம் விளம்.*

**கா**வெ னக்கரு தென்னை யாள்சிவ
கந்த னேயுனை யேபெருந்
தேவெ னக்கரு துள்ளொ டன்பு
சிறந்த சீலமு மோங்கவே
ஒவெ னைக்கரு தோர்பி ரப்பையி
லுடைய நாயக மீண்டுறு
தாவி னைக்களை யூருள்பு ரிந்துயர்
தயவில் வைத்தினி தாள்வையே. 61

**ஆ**ளு நின்னடி சூழு நர்க்கரு
ளயில மற்றுமெ னக்கிடு
கேளு யர்ந்தெனை நம்பு மன்பு
கிளர்ந்த வர்க்குமி யைந்தசீர்
நாளு நல்குதி நாயெ னைத்தளி
னாலு மென்றனை நம்பியுன்
தாளு கந்தவ ரைப்ப ராபர
தள்ளி டாதடி நல்கியாள். 62

**ந**ல்ல பொன்மயி லூரு மென்னொரு
நாத னேயினி வாதநூல்
வல்ல னென்று மதிக்கு மாறுரை
மல்கு சங்கம்வி ரும்பிலேன்
இல்ல மேயசி றந்த மானவ
ரென்பர் நேயமு நம்பிலேன்
அல்ல நீர்மட மால யங்க
ளமைத்து வாழவு மெண்ணிலேன். 63

**எ**ண்ணு வாரக நண்ணி யேவரு
மெம்பி ரானின தின்பமாம்
விண்ணு லாநினை வாயி ருந்து
விரைந்து சுற்றொரு பம்பரம்

மண்ணு ளேயசை வற்று வீழ்வது
மான நாணயி லீசநின்
தண்ணு லாமடி வீழ வெண்ணிய
சரத முன்னுள மறியுமே. 64

**அ**றிய னாதியெ னெஞ்சி றந்திடு
மவத ரஞ்சக மயமெனும்
பொறிய னேகவி கார மாகிய
புவனம் யாவுமெ னக்குளே
சிறிய கானலி னீரெ னத்தெரி
தெளிவி லங்கிட வருடியால்
நறிய மாமறை நாய காவரு
ணாய காவயி னாயகா. 65

**நா**ய னேனுனை யெண்ணி யெண்ணியெ
னாவ ரண்டிட வலறிலேன்
நேய னேயரு ளென்று வீதிக
ணின்று கத்திவ ருந்திலேன்
தூய னேயரு ளென்று வீதி
தொறுங்கி டந்துபு ரண்டிலேன்
சேய னேகுரு ராய னேயருள்
செய்வை யோநனி யுய்யவே. 66

**வே**த ஞானவி முப்ப வேலவுன்
மெய்ப் பதந்துதி யாதவென்
ஏத நாவைந றுக்கி லேனு
ளிருத்தி யேகரு தாதமா
பாத கங்கெட நெஞ்சி லாணி
பதித்து நன்குபி ளந்திலேன்
ஆத ரத்துட னேதொ ழாவடு
வங்கம் வெட்டியெ றிந்திலேன். 67

**ஏ**றிப டைக்குக வுன்பு கழ்ச்சுவை
யேறி டாவிரு காதிலுங்
குறிலெ னாதச லாகை கொண்டு
குடைந்து குத்திய றுத்திலேன்

வெறியி லுன்னெழில் கண்டி டாதவென்
விழிக ளைக்கதிர் கொண்டிறை
செறிபு றாவின முட்டை யென்ன
வெடுத்து நன்குசி தைத்திலேன். 68

சிதைவு றாவலி யுற்று வெண்மை
திகழ்ந்த வென்னது பற்கள்வீழ்
விதைக ளென்னவி ழுந்தொ ழிந்தமை
போல வென்மலம் யாவுமே
சிதைய நீவிரை வருளு நாளெது
தெரிகி லேனுய ரறி விலேன்
கதைக டாவசு ரர்க்க ளைந்த
கனத்த வெஃகவி ரத்தனே. 69

அத்த னேயரு ளப்ப னேயென
தாதி யேபெரு நீதியே
நித்த னேநிரு வாண னேநினை
நேய னேமறை வாயனே
பித்த னேனறி யாது செய்த
பெரும்பி ழைத்தொகை மன்னியென்
சித்த மானது தண்ணெ ணப்புரி
தேற லுங்கொடு சேயனே. 70

*8-வது எழுசீர்க்கழி நெடிலடியாசிரிய விருத்தம்.*

மா தேமா தேமா தேமா தேமா தேமா கூவிளம்.

கொடுமை யேயி லாத நல்ல கொள்கை யார்மு னாளுளே
படுமை தன்னை நீண்ட நாளில் வென்ற டைந்த பாக்கியங்
கடுமை நெஞ்செ னக்கு மெய்து கால மற்ப மாகுமோ
நெடுமை வேல்ப ரித்த வேக நித்த வெங்கள் கத்தனே. 71

சுத்த னேநி ருத்த னேக னிந்த நெஞ்சர் காணுமா
முத்த னேக டம்ப ணிந்த மொய்ம்ப னேயி ரும்புகல்
ஒத்த நெஞ்சி னேன எப்பி லுத்தி யோகம் வேண்டலுன்
மத்தர் கொள்கையாகு முன்னன் மக்க ளுஞ்சி ரிப்பரே. 72

மக்க ளிற்சி றந்து ளோர்வ ழங்கி யுள்ள சொற்களென்
தொக்க நூலு ணான றிந்தி டாவ ணந்தொ டர்ந்தரோ
புக்க வாறு தீய வென்பு லத்தி லுன்ற னின்னருள்
தக்க வாறு புக்கு றாது கொல்ச டக்க ரேசனே. 73

சடமெ னச்சொல் பொய்யி ருக்கு நானு னன்பர் சாத்திர
படம்வி ரிப்ப தும்பல் பாடல் பாடி வைப்ப தும்பொலா
உடலி ருக்கும் வேசி தன்னு டம்ப லங்க ரித்தலை
விடவு யர்ச்சி யாகு மோவி னோத யோக வேலனே. 74

வேல்பி டித்த கைம்மு தால்வி வேக நிட்டையெம்பிரான்
மால்பி டித்த வென்மனத்தின் மன்னு மோவிண் மின்னுமோ
கால்பி டித்த வர்க்க தோர்க ணத்தி னெய்து மெண்ணிலா
நூல்பி டித்து ளாரு மேநு ழைந்து காண வல்லரோ. 75

வல்லி டும்பை தந்து மோக மாவ னத்தி லேசதாச்
செல்லு நெஞ்செ னுங்கு ரங்கு தேயு மாறு செய்தொழில்
எல்லை யெந்த மட்டு மந்த மட்டு மின்ப மேயெனக்
கல்லு றழ்ந்த நானு நன்கு கண்ட னன்சி கிப்பரா. 76

பரம ராஜ ராஜ யோக பாச நாச பாவகீ
பிரம மான வுன்னை யும்பி தற்று மென்னை யுஞ்சரா
சரம கிக்கண் வேறு வேறு தள்ளி வைத்து நிற்பதவ்
வுரம னத்த தேயெ னாவு ணர்ந்து ளேனு ணர்ந்துளேன். 77

உணரு மென்ற னெஞ்ச மான துள்ள கத்தொ டுங்குகால்
கணவு லோக மில்லை வேறு கண்ட நானு மில்லைதூ
அணவு வான மொன்றி ருந்த தற்றி யாது ரைத்தருள்
மணமறாத பாத நாத மல்கு பொற்சி லம்பனே. 78

சிலம்ப ருஞ்ச தங்கை தண்டை சேர்ப தச்சு ரேசுரா
நலம்பி றங்க கண்ட யோக ஞான மாவெ ழுந்தருள்
உலம்பெ னங்க நோய்க ளோட வொற்க மோட வீணிலே
புலம்ப லோட வொலக லேபொ ருந்து புன்மை யோடவே. 79

ஓட லிற்சு கங்கெ டுத்த வுள்ளை நோவ னோவிழி
நாட லெண்ணி நோவ னோந யப்பில் காதை நோவனோ
ஊட லெண்ணி நோவ னோவு ணாவை நோவ னோமணந்
தேட லெண்ணி நோவ னோசி வந்த மேனி யாயினி. 80

*9-ஆவது எழுசீர்க்கழி நெடிலடியாசிரிய விருத்தம்.*

புளிமாங்காய் தேமா புளிமாங்காய் தேமா
புளிமாங்காய் தேமா புளிமா

*தனதந்த தந்த தனதந்த தந்த*
*தனதந்த தந்த தனனா.*

**இ**னியென்ற னன்பு தனைநன்கு ணர்ந்து
ளிதயங்கு ளிர்ந்தென் மகனே
துனியென்ற துன்ப மிலையென்ற றைந்து
சுவைவென்ற வின்ப மருளாய்
முனியென்ற கும்ப னதுவந்த னங்கொண்
முருகண்டு கஞ்ச வடியாய்
பனியென்ற கங்கொல் பவர்தஞ்ச மென்று
பரவுஞ்சி லம்பு றடியாய். 81

**அ**டியந்த மொன்று மிலதெங்கு நின்ற
தகளங்க மன்ப ரருளே
படியந்த நெஞ்சி லுறுநண்பு கந்த
பரமென்ப ருன்ற னருளோர்
விடியந்த மென்ற னுளநின்று வந்து
விரவன்ப வென்று புகன்மேல்
நடியந்த வின்பு மருள்விஞ்சு கங்கை
நதிதங்கி வந்த நறவே. 82

*தனதத்த தத்த தனதத்த தத்த*
*தனதத்த தத்த தனனா*

**ந**றவுற்றி ருக்கு மொலியற்க முத்தி
நடனப்பொ திக்க ணமர்வோர்
உறவுற்றி ருக்கு மிறைவிக்கி னிக்கு
முருவைத்த ரித்த மதலாய்

குறவுச்சி தப்பெ ணுளநச்சு சுத்த
குணவற்பு தப்பொ னயிலாய்
துறவுச்செ ருக்கி னனிவைத்த ளப்பில்
சுகநிட்டை முற்ற வருளே. 83

அருளைத்து தித்து னடியைத்து தித்து
னடியார்த்து தித்து மலமாம்
இருளைத்து றத்தும் வலியுற்ற வர்க்கு
ளெழுசிற்சு கத்தை யளியாய்
மருளைத்து தித்து வழிபட்ட பித்தர்
மனசிற்பி ணிக்க வரியோய்
கருளைத்து ரத்து மளகக்கொ டிச்சி
கவினைக்க ணிக்கு மிளையோய். 84

*தனதந்த தத்த தனதந்த தத்த*
*தனதந்த தத்த தனனா.*

கணிதம்ப டித்த வெவருங்க ணிக்க
வரிதுன்க னத்த கழலோ
டணிதண்டை முத்த மெனநன்கு ரைப்ப
ரடிகண்ட சித்த ரழியா
மணிதங்கு பொற்பு மகுடந்து ளக்கி
மயிலுந்தெ னப்ப வறிவார்
துணிதந்து னொட்ப வடியென்ற சுத்த
சுகவின்பி ருத்தி யருளே. 85

அருவென்று ரைக்க வுருவென்று ரைக்க
வலதென்று ரைக்க வமையா
தொருவின்ப நித்த வறிவென்ற ரற்று
முனையந்த வொட்ப மறைநான்
வெருவென்று நிற்கு நிலைநன்க ளித்து
மிளிரொண்ப தத்தி லினிதாய்
இருவென்றி ருத்தி யருளன்ப ரற்பி
னிடைவந்து திக்கு முருகா. 86

*தனதத்த தந்த தனதத்த தந்த*
*தனதத்த தந்த தனனா.*

முருகிட்ட மஞ்ச ளவிர்பொற்பு டம்பு
முகடொத்த கொங்கை யுடையார்
கருதொட்டம் விஞ்சு மொருசுத்த குஞ்ச
ரியினிட்ட கந்த வினிநான்
ஒரு கட்ட மும்ப டுதலற்று யர்ந்த
வுரனுற்றி யங்க வருளோர்
குருகட்ட வென்றி யயிலத்த வண்டர்
குடியைப்பு ரந்த பெரியோய். 87

பெரியத்த வும்பர் பணியத்த தொண்டர்
பிரியத்த மர்ந்த தலைவா
கரியைத்த டிந்த பெரியர்க்கி தஞ்செய்
களியைக்கொ ணர்ந்த முருகா
துரியத்தி ருந்து கதவைத்தி றந்து
சுடரிற்சி றந்த சுடராய்
விரியத்தி டஞ்செய் தருணற்க டம்பு
மிலைவெற்பின் விஞ்சு புயனே. 88

*தனதான தத்த தனதான தத்த*
*தனதான தத்த தனனா.*

புயனேர்கொ டைக்கை யினர்நீத நட்பர்
புலவோர கத்தி லுறையோர்
வியனேதி ருச்சின் மயனேமு டிக்கும்
விமலாமு டித்த வுலகீ
அயனேய ளிக்கு மனகாவெ னக்கு
ளறிவாயி ருக்கு மயிலாய்
நயனேகொ டுத்தென் வினைவேர றுக்கு
நடமேந டிக்க நினையே. 89

நினையேநி னைக்கு மெளியேன்ம டத்தி
னிலமீதி ழைத்த பவமா
வினையேக ணித்து நடுவேயொ ளிக்கும்
வினைதானு னக்கு ரியதோ

தனையேநி கர்த்த தயவோய்த வத்தர்
தவமாகு மிக்க பெரியோய்
கனையேற ளப்பில் கழலேகொ டுத்தி
கதிர்கால யிற்கை யரசே. 90

*10-ஆவது அறுசீர்க்கழி நெடிலடியாசிரிய விருத்தம்.*

**அ**ரசே யமுதே யருளா மாதா ரபரா சரணம்
பரசே யவனே சரணம் பதுமா சனனே சரணம்
சுரசே கரனே சரணந் துகள்போழ் குமரா சிவசங்
கரசே தனனே யெனையாள் கருணா கரனே சரணம். 91

**ச**ரநா யகனே மரணஞ் சனனங் காணாய் சரணம்
வரநா யகனே பொள்ளா மணியே சரணஞ் செருவேற்
கரநா யகனே பாவக் கழுவா யறியா வெனையாள்
பரநா யகனே சரணம் பழையார் பதியே சரணம். 92

**ப**தியே சரணம் வயிரப் படையாய் சரணங் கருணா
நிதியே சரணஞ் சுடர்சா னெடுவே லிறையே வினைசூல்
மதியே மதியா தவர்பான் மருவா மழவே சரணம்
கதியே துமிலா வெனையாள் கலைநா யகனே சரணம். 93

**க**லைவே தமுணர்ந் தருளே கருதும் பெரியா ரடைமா
நிலைவே தமுணர்ந் திடவே நினையென் பரனே சரணம்
சிலைவே லுடைவஞ் சகரின் றிறல்யா வையுநூ றிடுமார்
இலைவே லுடையா யழியா விருவா னடையாய் சரணம். 94

**வா**னா ரறிவே சரணம் வாடா மலரே மணமே
ஆனா வழகே யமரா தவிர்தீ பகமே யமுதே
ஊனா ருத்ரம் புகுதா வுயர்வைக் கருதென் குருவே
தேனா மருடந் தெனையாள் சிகியூர் தேவே சரணம். 95

**தே**வே பதினேழ் வருடஞ் செலுமென் றிதன்முன் பொருநாள்
நாவே யசையா வொலியா நவில்கட் டுரைநாள் சிலவே
பூவே கழியும் காறும் புலவா ருடலைப் பிரியா
யோவே லிறையே யெனையா ளுயிர்நா யகனே சரணம். 96

உயிரே தமெலா மழிமா றுபதே சவரந் தருவோய்
செயிரே துமிலா வரனே சிவனே சரணந் தவமென்
பயிரே வளரும் படியே பாயும் புனலே சுவைசால்
அயிரே யெனையா ளதுலா வயிலா மயிலா சரணம். 97

மயிலொத் தமடச் சூர்மா மகளுக் கினியோ யெனையாள்
வெயிலொத் தவொளிப் பலபூண் மின்னும் படிபன் னடனம்
பயிலொப் பிலியே யெலியூர் பரனார் துணைவா பதிநூல்
குயிலொட் பமகா முனியே குகனே சரணஞ் சரணம். 98

குகனே குகனே யெனவே குயினா வுறைவோ யறுமா
முகனே சரணங் குழைபூண் முருகா சரணஞ் சிவையின்
மகனே சரணந் திருமான் மருகா சரணஞ் சரணம்
சுகனே சரணந் தொழுமென் றுரையாய் வருவாய் சரணம். 99

வருவா யறியா வெளியேன் மருடீ ரடிகேள் சரணம்
திருவார் புகழ்சொன் னபிரான் செல்வச் சிவமே சரணம்
பெருவா னெனவே நாளும் பின்றா வருளா லெனையாள்
ஒருவா னவனே யுன்சீ ருறுநர்க் குலகம் பரமே. 100

*கல்லும் உருகுமாறு கரைந்து கரைந்து பாடப்பட்டதாயுள்ள இதனை நோக்க, ஆசிரியர் தங்கண்ணீர் வடிய வடியக் கலுழ்ந்து நின்று பாடியுளதென்பது வெள்ளிடை மலையென வேற்படுகின்றது. என்னை? ஒல்லும் உவமானச்சுவையோடு உவகைச் சுவையும் ஓசைச் சுவையும் அருளாய அருள்மணங்கமழ் சரணாரவிந்த சண்முகசிவ பக்திரச பௌவமாய்ப் பரமசுவானுபவப் பிழம்பாய்ப் பிறங்குகின்றதாகலின், இதனைப் படிப்பவர் தண்ணெனக் குளிர் கண்ணீர் பிலிற்றிக் கடவுள் வழிபாட்டைக் கருதாது புறம்போதற்கு மிடனுண்டோ? கி.பி. 1905ல் இவ்வந்தாதி அச்சிடப்படுவதாயிற்று.*

*- சுவாமிகள் சரித்திரம்*

குமாரவேள் பதிற்றுப்பத்தந்தாதி முற்றிற்று.

••••

# தங்க ஆனந்தக் களிப்பு.

| | |
|---|---|
| *சுயமான தங்கமித் | தங்கம் - சிவ |
| சுப்பிரமணியமெனுந் தெய்வத் | தங்கம் |
| 1. அந்தரர் வேண்டொரு | தங்கம் - ஈறி |
| லறுசிக ரக்கிரி நின்றெழு | தங்கம் |
| சுந்தர மாய்ச்சுடர் | தங்கம் - உமை |
| துங்க மலர்க்கரந் தங்கொரு | தங்கம் (சுயமான) |
| 2. வேதத்திலேயுள்ள | தங்கம் - சுத்த |
| வித்தைசொல் லாகம நித்தியத் | தங்கம் |
| நாதத்தின் மேலுள்ள | தங்கம் - அந்த |
| நாதங் கடந்தபின் னாமடை | தங்கம் (சுயமான) |
| 3. பார்ப்பவர்க் கின்புசெய் | தங்கம் - சிவ |
| பாக்கிய மெல்லாம் பகுக்கின்ற | தங்கம் |
| சீர்ப்பர தத்துவத் | தங்கம் - நிறை |
| சிற்பர தேஜோ மயானந்தத் | தங்கம் (சுயமான) |
| 4. நினைப்பவர்க் கின்புசெய் | தங்கம் - தொண்டர் |
| நெஞ்செனும் பேழையி லேநிறை | தங்கம் |
| வினைப்பவம் வெல்பசுந் | தங்கம் - ஞான |
| விளைவற்ற பூமியிற் புதைபட்ட | தங்கம் (சுயமான) |
| 5. வாதிகட் கெட்டாத | தங்கம் - அன்பு |
| வறண்டலை வோரறி யாவருந் | தங்கம் |
| தீதிகற் சூள்களை | தங்கம் - தவச் |
| செல்வர்க்குச் செல்வம தாந்திருத் | தங்கம் (சுயமான) |

6. அஞ்சனத் தெட்டாத — தங்கம் - பத்தி
யஞ்சனத் தேயெட்டு மற்புதத் — தங்கம்
செஞ்சயத் தைத்தரு — தங்கம் - சிவ
சித்தர்கள் யோகிகண் மெச்சிடு — தங்கம் (சுயமான)

7. மாற்றி லுயர்ந்தொளிர் — தங்கம் - எல்லாம்
மங்கும் படிக்கருள் செய்தனித் — தங்கம்
ஆற்றலின் மேம்படு — தங்கம் - பகி
ரண்டமெல் லாம்விலை கொண்டுயர் — தங்கம் (சுயமான)

8. அளவைக் கடங்காத — தங்கம் - தின
மனலிட் டுருக்கினு முருகாத — தங்கம்
களவுக் கிணங்காத — தங்கம் - தன்னைக்
காமுறு வார்மிடி தீர்க்கின்ற — தங்கம் (சுயமான)

9. யாதனை யைத்தெறு — தங்கம் - தெய்வ
யானை விழிக்கித மாயவிர் — தங்கம்
ஏதணை யாநறுந் — தங்கம் - எழி
லேனலி னோர்கொடி தான்படர் — தங்கம் (சுயமான)

10. ஞானவிண் ணாகின்ற — தங்கம் - நல
நல்குந் திருப்புக ழோன்கண்ட — தங்கம்
வானவர் மாமுடித் — தங்கம் - நம்மை
வாழ்விக்க வந்த பராபரத் — தங்கம். (சுயமான)

தங்க ஆனந்தக்களிப்பு முற்றிற்று.

# திருத்தணிகைமலை.

---

**அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.**

**பண் - பஞ்சமம்.**

பொன்னா ரங்க டாங்கு கொங்கைப் பூவையர் மையலிலே
பன்னா ளும்பட் டுழை கொண்டு படுவனஞ் சேர்முன்னே
தென்னார் வண்டு பாடு தெய்வத் தணிகை நெடுங்கிரிவாழ்
மன்னார் ஞானச் சேய்செம் பாத மலரை வணங்குதுமே.

கூனி யாடிக் கோல தூன்றிக் குறுகி நடந்திளைஞர்
பானெ கிழ்ந்த கஞ்சி யுண்டு படுவனஞ் சேர்முன்னே
தானி யார்த்தச் செல்வர் சேருந் தணிகை நெடுங்கிரிவாழ்
ஆனி யற்ற சேய்செம் பத்ம வடியை வணங்குதுமே. 2

ஈழை கீர்கீ ரென்றி முக்க விரும லெழும்புமுனே
தாழை வாழை யீனும் வண்மைத் தணிகை நெடுங்கிரிவாழ்
ஏழை வள்ளி கொண்கன் மாலுக் கிகல்வளை தந்தபிரான்
மாழை ராம நாதன் பாத மலரை வணங்குதுமே. 3

கண்கள் மங்கிக் காத டங்கிக் கருத்து மயங்குமுனே
தண்கொள் பங்க யங்கள் விள்ளுந் தணிகை நெடுங்கிரி வாழ்
பண்கள் பாடு வாயன் சேயன் பனிமலர் மன்பணிகோ
கண்க ளீரா றெந்தை பாத கமலம் வணங்குதுமே. 4

கேச மெல்லாம் வெண்மை பூத்துக் கீழ்நடை காண்முன்னே
தாசர் பல்லோ ரேத்த வுள்ள தணிகை நெடுங்கிரிவாழ்
ஈச னீசர் பால னாத னிமையவர் கோனம்மான்
வாச மொய்ம்ப னெந்தை பாத மலரை வணங்குதுமே. 5

மூளை குன்றி மாழை கொண்டு முழுது மடங்குமுனே
தாளி தண்டு மல்கு வண்மைத் தணிகை நெடுங்கிரிவாழ்
காளை காளை யான னத்தான் கடவு ணறுந்தகரப்
பாளை யோதி வள்ளி மன்றாட் பதுமம் வணங்குதுமே. 6

**கா**ல்கை யோய்ந்து கீல்மு டங்கிக் கவலை யழுந்துமுனே
சால்பு வீங்கு நேச ரேத்துந் தணிகை நெடுங்கிரிவாழ்
வேல்கொள் கையன் புள்ளி ருப்போன் விடவ ரவந்தொழுத
வால்கொள் பாதன் சுந்த ரன்தாள் மலரை வணங்குதுமே. 7

**வெ**ள்ளை யாய பல்வி ழுந்து விரைவு தளர்ந்திடுமுன்
வள்ள னம்பன் பிள்ளை யேயெம் மனதை யுணர்ந்தருளும்
தள்ளை யேயென் றன்பி னேத்தித் தணிகை நெடுங்கிரிவாழ்
மள்ளல் வேலன் மாசில் பாத மலரை வணங்குதுமே. 8

**பா**ய்கி டந்து பவ்வீ பெய்து பையல்கள் சீயெனுமுன்
காய்கி ழங்குண் போர்க ணாத கருணை யிரங்கியருள்
தாய்கி ரந்தி நூறை யென்று தணிகை நெடுங்கிரிவாழ்
சேய்கி ளர்ந்த வேரி யந்தாட் டிருவை வணங்குதுமே. 9

**உ**ண்ணீ ரன்னஞ் செல்ல லின்றி யுயிரு ளடங்குமுனே
தண்ணீ ரென்று முள்ள வண்மைத் தணிகை நெடுங்கிரிவாழ்
தெண்ணீர் மைச்சு ரேசன் சந்தத் தெருள னிறைஞ்சியகோன்
கண்ணீ ராள ரன்பன் பாத கமலம் வணங்குதுமே. 10

## அயலாவதுமென்னே

### கலிவிருத்தம்

**சீ**ரிய வந்தணர் சிந்தையி னுள்கோர்
காரிய நன்னெறி காதன்ம லிந்துன்
பேரிய வெற்கும் வழங்கிய பின்னென்
ஆரிய வின்றய லாவது மென்னே. 1

**ச**த்திய மேயுரை யென்றருள் சாரும்
புத்தி யுரைத்து மறைந்து புலங்கூர்
நித்திய வன்பி னிறீஇய பின்னென்
அத்த வெனக்கய லாவது மென்னே. 2

**வீ**ட்டில்வை கேல்வையிலும் விட்டு வந்தபிற் போதுமுற்ற
வாட்டமெ லாஞ்செகுத்த மட்டின் மாக்கரு ணைக்கடலே
கோட்டமில் வேற்பெருமா னிச்சைக் கொட்புடை யற்பவுயிர்
ஆட்டம்வி டுத்தவுட னென்னை யாதரிப் பாரெவரே. 6

**பா**சடை மொய்த்ததிமி சென்னப் பைந்தினை காத்தவண்முன்
ஏசற நின்றபிரா னென்னை யுந்தடை செய்தபிரான்
தேசவிர் வேற்பொருநா வொப்பில் சிற்பர நின்னையல்லால்
ஆசகம் விட்டவுட னென்னை யாதரிப் பாரெவரே. 7

**மு**கிலைம ருட்டுகுழற் றெய்வ யானைகொண் முத்தேசெஞ்
சிகியிலெ முந்தருளுந் தெய்வ நாயக மேசிவமே
மகிமைத ரும்பொருளே நெஞ்சம் வாடிவ ருந்தியிந்த
அகிலம்வி டுத்தவுட னென்னை யாதரிப் பாரெவரே. 8

**ப**வமற வென்றுனது செய்ய பாதந்தி னந்துதித்தேன்
சிவமணி யென்றுனையே சிந்தை யுஞ்செய்ய லானேனென்
கவலைய டுங்குகனே யிந்தக் காயம தோம்பிநிற்கும்
அவலம்வி டுத்தவுட னென்னை யாதரிப் பாரெவரே. 9

**கு**வலயம் வென்றுபுகழ் சொற்ற கொன்னுடை யானிதயம்
இவருமி ளம்பெருமா னென்னு மெண்குண மேயவனே
புவனம னைத்துமிருந் துள்ள புண்ணிய சண்முகவிவ்
வவதிவி டுத்தவுட னென்னை யாதரிப் பாரெவரே. 10

*உடம்பு உயிரை விட்டு நீங்கி ஒழியுமுன்னமேயே அது, மானுடராற் சிறுவரை ஓம்பப்படுகிறதென்பதூஉம், பின்னர் உயிரை ஓம்புந்திறன் தெய்வஉதவிக்கே உண்டாகலின் அவ்வுதவியைத் தூலநீங்குமுன்னே தேடிக்கோடல் அறிவுடையார் செய்கையாமென்பதூஉம் ............... உணரக்கிடக்கின்றன வென்க.*

*(திருப்பா 105 / 9ன் அடிக்குறிப்பு)*

*முதல் மண்டலம் 8-ம் பதிகத்தின் 2-வது திருச்செய்யுளும், காசியாத்திரை 188, 189-வது திருச்செய்யுள்களும் உரையும் இவை போன்ற ஏனையவும் படித்துணர்க.*

*- பதிப்பாளர்*

# சரண விண்ணப்பம்

## அந்தாதி

### அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்

அத்தனே சரண மெங்க ளாதியே சரணந் தூய
சித்தனே சரணஞ் சைவ தெய்வமே சரண ஞான
முத்தனே சரண மோன முனிவனே சரணம் வேத
வித்தகா சரண மென்னை வெளிப்படக் காட்டு வாயே. 1

காட்டிய வுலகி யாவுங் காக்குநின் னருளி னென்னைக்
கூட்டியாட் கொளுமெங் கோனே குமரனே சரண நீபம்
சூட்டகன் மார்பா வுள்ளத் துய்யனே சரண மோக்க
வீட்டையாள் வானே யந்த வீடெனக் காக்கிடாயே. 2

ஆக்கைபொய் யுறவா மென்று னடைக்கலம் புகுந்த வென்னைக்
காக்கவிந் நாளி மூத்த கருத்தனே சரண நீறு
பூக்குமா தார தேவ புனிதனே சரணம் வேத
வாக்குடை யடிகே ளாள வருவது தருணந் தானே. 3

தருணமு மறிந்தெ னாது தன்மையு முணர்ந்து நல்ல
அருணல மளிக்கு மெங்க ளையனே சரணம் வேத
உருவனே சரண மாதி யொருவனே சரண நாளும்
முருகனே சரண மோன முனிவனே சரண மன்னோ 4

சரணநின் சரண நானே சரவண பவனே சன்ம
மரணமு மளவு மில்லா மழவனே சரண மாதிப்
பிரணவ மருளு மூலப் பிரமனே சரண மாறும்
மருவிய பொருளே யென்னை மனமுவந் தாண்டு கொள்ளே. 5

கொள்ளவென் றகத்தி யற்குங் குயிற்றரும் புகழாற் சீர்த்தி
அள்ளவந் தவற்கு மோது மையனே சரண மெங்கள்
வள்ளலே சரண மூல மறையவ சரண மென்னைத்
தள்ளிடா தாண்டு கோடி தாவுடைப் பிழைபொ றுத்தே. 6

பிழைபொறுத் தாளற் காய பெற்றியே சரண நட்பை
மழையெனப் பொழிவி லாச வானமே சரண மென்கண்
நுழைமதிச் செறிவா யோங்கு நுட்பமே சரணங் கோலத்
தழையுடைச் சிகியி லூருஞ் சண்முகா சரண நானே. 7

நானென தெனறா மோய நல்லருள் காட்டு மின்ப
வானநா யகனே யுன்றன் மலரடி சரணஞ் சாம்பி
ஈனமா நெறிநான் சென்றா லெதிர்நின்று தடுத்தாட் கோடற்
கானசேய் சரண மாசி லங்கணா சரணங் காணே. 8

காணுமென் றந்தாய் வேத கதிநெறிக் கந்தா வேமப்
பூணுமுற் பலமும் பூணும் புயத்தனே சரணம் பூவார்
வாணுதல் வள்ளி யெந்தாய் மணமுதால் சரண மென்னைப்
பேணவுட் படர்ந்திவ் வாறு பிதற்றிநா னிற்கின் றேனே. 9

நிற்குமெ னுருவைக் காட்டி ஞேயமோ டருளிற் கூட்டிச்
சிற்பர மளித்த தேவ தேவனே சரண நாளும்
பொற்பதம் விழைவார்ப் போற்றும் புண்ணியா சரண மெம்மான்
அற்புத வருணைப் பேரா னத்தனே சரண மன்றே. 10

# தகராலயரகசியம்

## தோத்திரவியல்

நன்றென மைந்தனு வந்துப ரிந்தர நந்தன கந்தகுகா
மன்றமி குங்குழ லஞ்சுர குஞ்சர மங்கைம ணந்தமனா
என்றன ரும்பர சங்கர புங்கவ வெங்குநி றைந்தவணா
இன்றென ரந்தையொ டுங்குவணம்புரி யென்றுப ணிந்தனனே. 1

மாபல தேவர்கடேவம னோலய வாழ்வுடை யார் முதல்வா
நீபந றாவணி மார்பவ னாரத நீதிப ராகுமரா
பாபவி நாசந டேசகு கேசுர பாலவி லோசனமா
தாபமு ளேனுனை யேகதி யாயடை சார்புள னாளுதியால். 2

சேலன கோவார் வேலன தோளார் சிவைசேயா
மாலன மாலா ரோதிமொய் கானார் மகனேயா
மூலப ரேசா சீலந டேசா முருகாமா
சாலவி னோதா வாளுடை யாய்தா டரவாவா. 3

சூரச மாரா வாரக ராவார் சுகராயா
நாரசு ரேசா வீரகுமாரா நடராயா
ஈரவி ராமா மாமயி லாவே சிடரேறாத்
தாரவி சாகா காநனி காவா சகமீதே. 4

பீடார் நால்வே தாதி தாசோ பிதசோதீ
தாடா தாடா தாதா வேயா ளெனவாடார்
கூடா வாழ்வா வாடா நாடா குகதேவா
ஏடா வாடா வீடீ வோநா மெனவாடே 5

நாதநி லைக்குயர் வுளக ணலங்கிளர்மெய்ப்
போதவெ ளிக்குண லசைவு பொருந்தவிடு
பாதமெ னக்கருண் முனிவர் பணிந்தறியென்
பேதம றுத்திட வுரிய பெருங்குகனே. 6

உயிரொடு சித்துந லுடலு மொருங்குறநின்
றயர்பர நிட்டையி லொளிரு மரும்பொருளே
செயிரறு சிற்சுக னமது திருந்துநடங்
கயமுற நித்தலு மிடுகு கவந்தருளே. 7

தேனினு மின்புறு மினிமை சிறந்திடவென்
பானிகழ் கின்றபல் பனிகள் பறந்தறநின்
கோனுனுள் வந்தன னெனுரை குயின்றருள்செய்
ஞானந டம்புரி குகவெ னலம்பரமே. 8

மூடம லங்கெட வறிவு முதிர்ந்திடவென்
னோடணை யன்பர்க ளெறியை யுவந்தருளுஞ்
சேடுய ரென்குக தகர சிதம்பரமாம்
வீடெனு மம்பெரு வெளியில் விளங்கொளியே. 9

திருச்சிற்றம்பலம்

# பாம்பன் ஸ்ரீமத் குமரகுருதாச சுவாமிகள் அருளிச் செய்துள்ள நூல்கள்

## முதல் மண்டலம்

| | | | |
|---|---|---|---|
| 1. | குமரகுருதாச சுவாமிகள் பாடல்கள் (பாடல்கள் மட்டும்) | ரூ | 60.00 |
| 2. | மேற்படி நூல் உரையுடன் | ரூ | 350.00 |

## இரண்டாம் மண்டலம்

| | | | |
|---|---|---|---|
| 1. | திருவலங்கற்றிரட்டு முதல் கண்டம், இசைத்தமிழ் | ரூ | 25.00 |
| 2. | திருவலங்கற்றிரட்டு, பல்சந்த பரிமளமாகிய இரண்டாங் கண்டம், (ஞானசாத்திரம், யாப்பிலக்கணம், யாப்பிலக்கியம், குழிப்பிலக்கணம், குழிப்பிலக்கியம், அணியிலக்கண சித்திரக்கவியென்னும் ஏழுவடிவிற்றாகவும் அமைந்தது-சந்த பேதங்களை யெல்லாம் சாலவிளக்குவது. பெயர் தெரியாமல் "வேறு-வேறு" என வரைதல் முதலிய அறியாமையை அடியோடழிக்கும் வன்மையுடையது பாடல்கள் மட்டும்) | ரூ | 40.00 |
| 3. | மேற்படி நூல் உரையுடன் | ரூ | 150.00 |

## மூன்றாம் மண்டலம்

| | | | |
|---|---|---|---|
| 1 | சிவஞான தீபம் (குமாரக்கடவுள் வழிபாட்டினை மந்திர சகிதமாக கூறுவது) மற்றும் காசியாத்திரை (உரையுடன்) | ரூ | 50.00 |
| 2 | பரிபூரணானந்த போதம் - சிவசூரியப்பிரகாசம், (சைவமகா சாஸ்த்திரம் முழுவதும் அகல உரையுடன்) சுத்தாத்வைத நிர்ணயம் | ரூ | 70.00 |
| 3. | மேற்படி நூல் பாடல்கள் மட்டும் (ஆங்கில மொழிபெயர்ப்பு) | ரூ | 25.00 |
| 4. | தகராலய ரகசியம் - சதானந்த சாகரம் (வேதத்தால் சுப்பிரமணிய பரத்துவ போதகம் விளக்குவது- அகல உரையுடன்) | ரூ | 95.00 |

## நான்காம் மண்டலம்

1. சிறுநூற்றிரட்டு : சண்முககவசம் முதலிய 10 நூல்கள் அடங்கியது பரிபூஜன பஞ்சாமிர்த வண்ணம் (திருசெந்தூர் முருகப்பெருமான் நேரில் வந்து அங்கீகரித்தது) - குமரவேள் பதிற்றுப்பத்தந்தாதி - படிக்கும் தோரும் கண்ணீர் வாரப்பத்திரசம் இனிது பெருகும். ஸ்ரீமத் சுவாமிகளே சில காலம் நித்தியபாராயண நூலாக கொண்டிருந்தார்கள். (இவை முழுவதும் உரையுடன்) ரூ 50.00

2. அமைதி ஐம்பது எனும் சேந்தன் செந்தமிழ் (வடமொழியே புகாது தூயசெந்தமிழில் முருகப் பெருமான் மீது பாடிய 50 பாடல்கள், அகரநிரலாய் சுமார் 3000 சொற்களுக்கு நிகண்டுகளாலும், அறியக்கூடாத குறையை தீர்க்கவல்லது. ரூ 40.00

3 செக்கர்வேள் செம்மாப்பு, செக்கர் வேளிறுமாப்பு, கனவதிகாரம் - எளிய நடையில் ஸ்ரீகுமார பரமேஸ்வர பெருமானின் முழுமுதன்மையை எடுத்துரைப்பது. இத்துடன் சைவமகிமை - ஸ்ரீமத் அருணகிரி நாதசுவாமிகள் சரித்திர சுருக்கம் சேர்ந்தது. ரூ 60.00

4. பத்துப்பிரபந்தம் - (சஷ்டி வகுப்பு, தங்க ஆனந்தக்களிப்பு விசேட, சித்திர, விசித்திர கவிகளைக் கொண்டது) முழுவதும் உரையுடன் மற்றும் செவியறிவுறூஉ. ரூ 30.00

## ஐந்தாம் மண்டலம்

1. திருப்பா - திட்பம் ((முதல் புத்தகம்) (அகல உரையுடன்) ரூ 95.00

2. திருப்பா - இரண்டாம் புத்தகம் (சற்குரு மானச சௌரப மாருதம் உரையுடன்) ரூ 195.00
ஸ்ரீகுமார பரமேஸ்வர பெருமானுடைய முழு (முதன்மைய வேதவாக்கியங்களால் எடுத்தியம்புவது)

## ஆறாம் மண்டலம்

1. ஸ்ரீமத் குமாரசுவாமியம் ரூ 90.00
(ஸ்ரீமுருகப்பெருமான் சரித்திரமாக திருவிளையாடற் காண்டம் முதலியனவும், கேத்திர காண்டம் முதலியனவும் கொண்டது ஸ்ரீமத் சுவாமிகளின் கால் முறிவை இயம்பும் அசோக சாலவாசம் முதலியனவும் உள்ளடக்கியது.)

## திவோதய ஷடக்கரோபதேச மெனும் சிவஞான தேசிகம்

| | | |
|---|---|---|
| 1) | 1வது கடவுளைக் குறித்த வியாசம்<br>2வது தேவர்களை குறித்த வியாசம்<br>3வது பரம சிவமென்பதைக் குறித்த வியாசம்<br>6வது வேதத்தைக் குறித்த வியாசம்<br>7வது சமயங்களைக் குறித்த வியாசம் தொகுப்பு | ரூ. 55.00 |
| 2) | 21வது சீவயாதனா வியாசம் | ரூ 30.00 |
| 3) | 31வது ஸ்ரீ சுப்பிரமணிய வியாசம் மற்றும்<br>32வது குருசிஷ்ய சம்பவ வரலாற்று வியாசம் | ரூ 45.00 |

### ஏனைய நூல்கள்

| | | |
|---|---|---|
| 1. | சைவ சமய சரபம் | ரூ 60.00 |
| 2. | குமாரஸ்தவம், ஸ்ரீ சண்முக சகச்சிர நாமார்ச்சனை,<br>அஷ்டோத்தர சத நாமார்ச்சனை, சண்மூர்த்தி மந்திரம்<br>ஸ்ரீமத் பாம்பன் சுவாமிகள் சோடசம் | ரூ 10.00 |
| 3. | ஸ்ரீமத் சுவாமிகள் அருளிய 6666 பாடல்களின்<br>முழுத் தொகுப்பு | ரூ 750.00 |
| 4 | ஸ்ரீமத் பாம்பன் சுவாமிகளின் அருள் ஞான<br>வாழ்க்கைச் சரித்திரம் | ரூ 150.00 |

இந்த நூல்கள் கிடைக்குமிடம்

**N. ஜெயராமன்**

130, புஷ்பாவதி அம்மாள் தெரு,
மேற்கு மாம்பலம், சென்னை-600 033.

# சண்முக நாமாவளி

| | | | |
|---|---|---|---|
| ஹரஹர | சிவசிவ | சண்முக | நாதா |
| ஹரஹர | சிவசிவ | வெண்முக | நாதா |
| ஹரஹர | சிவசிவ | பரம | விலாசா |
| ஹரஹர | சிவசிவ | வடய | குகேசா |
| அருண | கிரிபரவு | மருணெறி | நாதா |
| தரும | வுறுவர்புகழ் | சததள | பாதா |
| அரிபிர | மாதிக | டொழுவடி | வேலா |
| திருவடி | நாரவ | ருளமுறை | சீலா |
| எனினிய | குருநித | வெணுமதி | யீசா |
| சனனவெய் | தறவளி | தருபர | மேசா |
| பாசா | பாச | பாப | விநாசா |
| மாசே | றாத | மான | நடேசா |
| போஜா | வாஜா | பூஜகர் | நேசா |
| தேஜா | ராஜா | தேவஸ | மாஜா |
| தீஞ்சுவை | யருளொரு | திருவா | ரமுதே |
| ஓஞ்சர | வணபவ | வுருவே | யருவே. |

---



## பிரார்த்தனை மலர்கள்

வேத நாயக நவிர நாயக வேலி னாயக விந்துமா
நாத நாயக வள்ளி நாயக யானை நாயக நின்றிருப்
பாத மேயுயி ரடையு மின்பது பற்று நானுன டைக்கலம்
ஆத லாலெனை யிடைய றாவரு ளால்வி ழைந்துபு ரந்தருள்.

சந்ததமு நின்ற னன்பு தஞ்சமென நின்ற நண்பர்
தங்கணடை துன்பு மாலெலாம்
நந்தமுன யர்ந்த வுன்ற னன்பனெனு மென்பு னெஞ்சு
நம்பொடுபு ரிந்த தீதெலாம்
வெந்தொழிய வந்தெ மன்ப புன்கணிலை யென்ற ணைந்து
விண்சுரர்பு கழ்ந்த வாழ்வையே
தந்திடுவை நம்பு மெங்கள் சிந்தைகுடி கொண்ட துங்க
சம்புசிவ கந்த சாமியே.

பிரண வத்திரு மேனிவை யயிற்பெரு மானுன்
சரண நம்பெனக் குறுமிட னெதுவது தருதி
மரண மாய்ப்பிறப் புறுமெனி னிப்புவி வழங்கேல்
அரண நாயக னேபெருந் தருமமிஃதாமே.

விலை ரூ.10.00

இந்நூல் கிடைக்குமிடம்


**N.ஜெயராமன்**
130, புஷ்பாவதி அம்மாள் தெரு,
மேற்கு மாம்பலம், சென்னை – 600033.
போன் : 044 – 2489 3298